# திருப்போரூர்ச் சந்நிதிமுறை
# அலங்காரம் மற்றும் திருவடிப்பற்று-4




ஆசிரியர்

**அருட்டிரு சிதம்பர சுவாமிகள்**

உரை விளக்கம்

**குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர்**

**வித்துவான் க. கதிரேசன். எம்.ஏ; பி.எட்**

பூவாளூர். 621 712

அலைபேசி: 09865 193754

# தோரணவாயில்

திருப்போரூர், தொண்டை நாட்டில் முருகப்பெருமான் அருள்வீச்சுச் சிறந்த திருத்தலங்களுள் ஒன்று. இதனைச் சமராபுரி என்றும் வழங்குவர். இங்கு எழுந்தருளியுள்ள முருகப்பிரானைச் சிதம்பர சுவாமிகள் போற்றிப்பாடிய பாடல்களின் தொகுப்பைத் திருப்போரூர்ச் சந்நிதிமுறை என்பர். முறை என்பது முறையீடு - வேண்டுகோள் என்றுபொருள் தருவது. திருப்போரூர் முருகப்பிரானின் சந்நிதியில் முறையிடுதல் என்பது இதன்பொருள். இதனை அருளியவர் சிதம்பர சுவாமிகள் ஆவார்.

இவர், மதுரையில் 17 ஆம்நூற்றாண்டில் வாழ்ந்தவர். நல்லகல்வியில் மிக்கவரான இவர் கவிராசர் என்று அழைக்கப்பெற்றார். விருத்தாசலத்து ரெட்டியார் ஒருவரது வீட்டில் அவர்மக்களுக்குக் கல்விபயிற்றினார். அப்போது அங்கு வந்த குமாரதேவர், இவரது கல்வியறிவின் சிறப்பை அறிந்து இவரைத் தமது குருவாகிய அருட்டிரு சாந்தலிங்கசுவாமிகளிடம் அழைத்துச் சென்று இவருக்கு உபதேசித்து ஏற்றருளுமாறு வேண்டியபோது, அவர் அங்ஙனம் செய்யுமாறு குமாரதேவருக்கே கட்டளையிட்டுத், தாம்அருளிய கொலைமறுத்தல், அவிரோத உந்தியார், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம் ஆகிய நூல்களுக்கும், கண்ணுடைய வள்ளலார் அருளிய ஒழிவிலொடுக்கம் என்ற நூலுக்கும் உரை எழுதுமாறு பணித்தார். சிதம்பரக் கவிராசர் அவரிடம் உபதேசம்பெற்று ஐந்து நூல்களுக்கும் உரைஎழுதிச் சாந்தலிங்கர் திருவடிகளில் சமர்ப்பித்தார். அவற்றைத் திருக்கண்சாத்திய சாந்தலிங்க முனிவர் பெரிதும் மகிழ்ந்தார்.

பின்னர்; திருப்போரூர் ஆலயத்தைப் பொலிவு கூட்டுமாறு - புதுப்பிக்குமாறு கட்டளையிட்டார். சுவாமிகள் புறப்பட்டுச் செல்லும்வழியில் பொம்மைய பாளையத்தில் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலைய தேசிக சுவாமிகளைக்கண்டு

அளவளாவியும் கிளியனூரில் ஞானத்தம்மையார் தந்த கூழமுது உண்டும் மகிழ்ந்து, குமாரதேவர் அருளால் அக்கோயிலின் அமைப்பைக்கண்டார். பல அற்புதச்செயல்களால் பணியாளர்களின் உள்ளத்தைக் கவர்ந்தும், பொருளீட்டியும் திருப்பணிகளை நிறைவேற்றினார். கிளியனூர் அம்மையார்தந்த பொன், முருகன்கோயில் தூபிக்கலசத்திற்குப்பயன்பட்டது. படிப்போர் நெஞ்சக்கனகல்நெகிழச் சுவாமிகள் அருளிய திருப்பாடல்கள் **திருப்போரூர் சந்நிதி முறை** என்று வழங்கப்பெறுகிறது. திருவாசகம்போலவே கட்டுத்தறியை விட்டோடும் நம்மனம்மாகிய யானையைப் போரூர்முருகப்பெருமானின் திருவடிகளில் நிலைக்கச் செய்யும் ஆற்றலுடையது திருப்போரூர்ச் சந்நிதிமுறை. ( முறை= முறையிடுதல். ) .

சுவாமிகள், திருப்போரூர்க்கு வடபாலுள்ள கண்ணுவர்பேட்டையில் திருமடம் ஒன்றுகட்டிக் கோவூர் சிவசங்கர முதலியாரைத் தமது சீடனாக்கிக் கோயில் நிருவாகத்ததையும் திருமடத்து நிருவாகத்தையும் அவரிடம் ஒப்படைத்து நிட்டைகூடி, முருகப்பெருமான் திருவடிநிழலை வைகாசி விசாகநன்னாளில் அடைந்தார்கள்.

( நன்றி : சென்னை சைவசித்தாந்த சமாஜத்தின் திருப்போரூச் சந்நிதிமுறை இரண்டாம் பதிப்பு.1948. )

இந்நூலில் சுவாமிகள் அருளிய அலங்காரம், திருவடிப்பற்று ஆகிய இரண்டினை மட்டும் எடுத்துக் கொண்டு, சந்திபிரித்து, குறிப்புரை, பொழிப்புரை, இன்றியமையா விளக்கம். இலக்கணக்குறிப்பு ஆகியன எழுதியுள்ளேன். அன்பர்கள் “ சொல்லிய பாட்டின் பொருளாக “ விளங்கும் போரூர் முருகப்பெருமானின் திருவருளைத் துய்த்து இன்புறவேண்டுகிறேன்,

அன்புடன்,

குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீனப்புலவர்
வித்துவான், க, கதிரேசன் எம். ஏ; பிஎட்.
. பூவாளூர். 621 712.
அலைபேசி : 098651 93754

# திருப்போரூர்ச் சந்நிதிமுறை

## அலங்காரம்

### காப்பு

முக்கண் பவள மலைவந்த தேனை முராரிதங்கை
பக்கத்(து) எடுக்கும் பரிமளப் பூவைப் பரிமயிலோற்கு
ஒக்கத் துணைவந்த உத்தம தேவை உயர்பொருளைச்
செக்கச் சிவந்தநன் மால்யானையைச் சிந்தை சேர்க்குதுமே.

**குறிப்புரை** ; பவள மலை= பவள மலையாக விளங்கும் சிவபிரான். தேன்= தேனாக விளங்கும் விநாயகர். முராரி= திருமால். பக்கத்து எடுக்கும்= ஒக்கலையில் -இடுப்பில் தூக்கிக்கொள்ளும். பரிமளப் பூ= மணக்கும் மலர். மயில் பரியோன்= மயிலாகிய குதிரையுடைய முருகப்பிரான். உத்தமத் தேவை= நன்மைதரும் தெய்வத்தை. மால்= பெருமை.

**பொழிப்புரை** : மூன்று கண்களுடைய பவளமலையாக எழுந்தருளிய சிவபிரான் அருளிய தேனும், திருமாலின் தங்கையாகிய உமையம்மை தனது ஒக்கலையில் - இடுப்பில் தூக்கிக்கொள்ளும். மணங்கமழும் மலரும், மயிலைத் தனது குதிரையாகக் கொண்ட முருகப்பெருமானுக்கு ஒத்த துணைவனாக வந்த நன்மைதரும் தெய்வமும், உயர்ந்தபொருளும், நன்மைதரும் மிகச்சிவந்த நிறத்துப் பெருமைபொருந்தியயானையும் ஆகிய விநாயகரை மனத்தில் நினைந்து வணங்குவோம்.

**விளக்கம்** : முருகனுக்குத் துணையாக வந்தது, முருகன் வள்ளியம்மையாரை மணக்கும் பொருட்டு.

**இலக்கணக்குறிப்பு** : பவள மலை, தேன், பரிமளப்பூ - உருவகங்கள். சேர்க்குதும் - உளப்பாட்டுத் தன்மைப்பன்மை வினைமுற்று.

### நூல்

பூமேவு நாபனும் நான்முகத் தோனும் புரந்தரனும்
தாமேவு வாழ்வும் அதிகார மும்பெறத் தார்புனைந்த
கோமேவு வேல்கொண்(டு) அவுணரை மாய்த்த குமரன்எம்கோன்
தூமேவு தாள்மலர் போரூரில் என்முடி சூட்டினனே.

**குறிப்புரை** : நாபன்= தொப்பூழுடைய திருமால். புரந்தரன்= இந்திரன். தாம் மேவு= தாம்பெற்றிருந்த / தா மேவு= வலிமைபொருந்திய பதவிவாழ்வு. கோ= தலைமை.

**பொழிப்புரை** : தாமரைமலர் பூத்த தொப்பூழுடைய திருமாலும் நான்முகனாகிய பிரமனும்பெற்றிருந்த வலிமைபொருந்திய பதவிவாழ்வை அவர்கள் பெறும்பொருட்டு, தலைமை பொருந்திய வேலினை ஏந்தி அசுரரை மாய்த்தவனாகிய வெற்றிமாலை சூடிய முருகப்பிரான் ஆகிய எமது தலைவன், தமது தூய்மைபொருந்திய திருவடிமலர்களை என்தலையில் சூட்டினான்.

**விளக்கம்** : இறைவன், மெய்யடியார்க்குத் திருவடி சூட்டுதல்

" ........................................................ ........................................................இனமலர்கள் போதுஅவிழ்ந்து மதுவாய்ப் பில்கி
நனைந்தனைய திருவடிஎன் தலைமேல் வைத்தார்நல்லூரெம் பெருமானார் நல்லவாறே"
( திருமுறை 6.திருநல்லூர் . மகுடம் 1- 11 )

சித்தவடமடத்தில், சுந்தரர்க்குத் திருவடிசூட்டல் :

" அதுகண்டு வீரட்டானத்து அமர்ந்தருளும் அங்கணரும்
முதுவடிவின் அந்தணராய் முன்ஒருவர் அறியாமே
பொதுமடத்தின் உள்புகுந்து பூந்தாரன் திருமுடிமேல்
பதுமமலர்த் தாள்வைத்துப் பள்ளிகொள்வார் போல்பயின்றார் " ( பெரியபுராணம். 231 )

( 2 ) தெய்வப் பிடிவந்து சேரும் துகிர்க்கிரி செந்தளிர்போல்
மெய்வைத்த வள்ளிக் கொடிபடர் தாரு வியனுலகில்
சைவப் பயிரை வளர்க்கும்தண் மேகம் தகைமைசெறி
நெய்வைத்த வேல்கொண்டு போரூரில் என்றும் நிகழ்தெய்வமே.

**குறிப்புரை** : தெய்வப்பிடி= அருள்தரு தெய்வயானையம்மை. துகிர்க்கிரி= பவளமலை - முருகப்பிரான். செந்தளிர்= அழகியதளிர். மெய்வைத்த= உடம்புடைய. தாரு= கற்பகமரம். வியன்= அகலமான. தகைமை செறிநெய் வைத்த= நன்மைமிக்க நெய் பூசப்பெற்ற. நிகழ்= வாழ்கிற.

**பொழிப்புரை** : நன்மை மிக்க நெய்பூசப்பெற்ற வேல்ஏந்தித் திருப்போரூரில் வாழ்கின்ற முருகன் ஆகிய தெய்வம்; தெய்வயானையம்மை வந்து சேரும் பவளமலையும், அழகிய தளிர்போன்ற உடம்புடைய வள்ளிநாச்சியார் ஆகிய கொடிபடரும் கற்பகமரமும், சைவப்பயிரை வளர்க்கும் குளிர்ந்த மேகமும் ஆகும்.

**விளக்கம்** : இரும்புஆயுதங்கள் பொலிவுடன் துருப்பிடிக்காமல் இருக்க நெய்பூசுவது வழக்கம்:

" இவ்வே பீலியணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்தாள் திருத்திநெய் அணிந்து
கடியுடை வியன்நகரவ்வே " ( புறம்.95 )

( 3 ) கருதார் புரம்கொன்ற சேவக னார்க்கும் களிப்புறவே
ஒருதா ரகப்பொருள் ஓதிய வாஉன(து) அன்பரைப்போல்
தருதா ரணிசொலும் நாயேனும் அன்புளம் தான்உளனோ
விருதாசெஞ் சேவல் சமரா புரிவரு வேலவனே.

**குறிப்புரை** : கருதார்= பகைவர்- பொன், வெள்ளி, இரும்புக்கோட்டைகளுடைய தாரகாட்சன், வித்யுன்மாலி, வாணாசுரன். கொன்ற= எரித்த. சேவகன்= சிவபிரான். ஒருதாரகம்= ஒப்பற்ற

ஓங்காரம். ஓதியவா= இரகசியமாகச் சொன்னவனே - முருகா. தாரணி= உலகம் - உலகவர். செஞ்சேவல் விருதா= சிறந்த சேவலை வெற்றிச்சின்னமாக - இலச்சினையாகப் பெற்றவனே.

**பொழிப்புரை** : முப்பகைவரின் முக்கோட்டைகளையும் எரித்த சிவபிரான் களிக்க, அவனுக்கு ஒப்பற்ற ஓங்காரப்பொருள் ஓதியவனே! சிறந்த சேவலை வெற்றிச்சின்னமாகக் கொடியில் பெற்றவனே! - இந்த உலகம் புகழும் உன்னடியவர்களின் அன்புள்ளத்தைப்போல் அன்புள்ளத்தைக் கீழானவனாகிய நான்பெற்றவனா ? கூறியருள். அத்தகு அன்புள்ளம் எனக்கு அருள்க.

**விளக்கம்** : ஓங்காரம் : " உய்யஎன் உள்ளத்துள் ஓங்கார மாய்நின்ற மெய்யா " ( திருவா. சிவபுரா. ) ஓங்காரம், அகரம், உகரம், மகரம், விந்து, நாதம் ஆகிய ஐந்தெழுத்துகளும் கூடிநின்ற ஒலி. இவ்வைந்தும் முறையே படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழிலையும் இவற்றுக்குரிய நான்முகன், மால் உருத்திரன், மகேசுவரன், சதாசிவன் ஆகிய ஐவரையும் குறிக்கும் என்பர். இவ்வாறு கூறுவதை வியட்டிப்பிரணவம் என்றும், எழுத்துகளால்பிரிவுபடாது நிற்கும் "ஓம்" என்பதைச் சமட்டிப்பிரணவம் என்றும் உரைப்பர். சமட்டிப்பிரணவமாய் இது பரம்பொருள் ஒருவனையே குறிக்கும் என்பர், முருகப்பிரானிடம் ஓங்காரத்துக்குப் பொருள்கூறிய நான்முகன் சமட்டிப் பிரணவப்பொருள் கூறாது, அகங்காரத்துடன் வியட்டிப்பிரணவப்பொருள் கூறியதால் குட்டப்பெற்றுச் சிறையும்பட்டான் என்பர்.

ஆணவம் கன்மம் மாயை என்ற மூன்றையும் முறையே பொற்கோட்டை, வெள்ளிக்கோட்டை, இரும்புக்கோட்டை என்று உருவகப்படுத்தினர். இதனை;

" முப்புரம் என்பது மும்மல காரியம் " என்று கூறுவார் திருமூலர். இம்மூன்றும் உயிரின ஈடேற்றத்திற்குப் பெருந்தடையாதலின் சிவபிரானால் அம்மூவரின் கோட்டைகளும் எரிக்கப் பெற்றன என்பது தத்துவப்பொருள்.

விருது பெற்றவர், அதனை உயர்த்திக்காட்டி மகிழ்வதுடன் பிறரையும் விருதுபெறும் முயற்சியில் ஈடுபட ஊக்குவது உலகியல். ஊர்திமயிலும் விருதுள் அடங்குமாயினும் உலகியலின்படி உயர்த்திப்பிடித்த சேவலை விருது என்று குறித்தார்.

( 4 )

சிற்றறிவு ஒன்று நினைப்பொடு நித்திரை சேர்ந்(து)இயங்கும்
மற்றிவை நீங்கில் அதுதான் எவைகளும் ஆகிநின்ற
அற்றம்இல் பேரறி(வு) ஊடே கலந்திடும் மாயம்இதே
பற்(று)அறு முத்திஎன் றான்சம ராபுரிப் புண்ணியனே.

**குறிப்புரை** : சிற்றறிவு = கீழான அறிவு. ஒன்று நினைப்பு= பொருந்திய எண்ணம். நித்திரைசேர்ந்து= கண்டு சேர்ந்து. மற்று இவை= கீழான அறிவும்அதன்வழி எதனையும் காணுதலும். அற்றம் இல்= அழிவற்ற. பேரறிவு= ஞானம். ஊடே= உயிருடன். மாயம்= தந்திரம்.

**பொழிப்புரை** : கீழான அறிவுடன் பொருந்திய நினைப்போடு எந்த ஒன்றையும் காண்பதே இயல்பு. . இக்கீழான அறிவும் அதன்வழி எந்த ஒன்றையும் காணுதலும் ஆகிய இரண்டும் நீங்குமானால், உயிர் அழிவில்லாத ஞானத்துடன் கலக்கும். உயிரை ஞானத்துடன் கலக்கச்செய்யும் இத்தந்திரம்தான் பற்றில்லாத முத்தி என்றான் போரூர் அருள்தரு முருகப்பிரான்.

**விளக்கம்** : கீழான அறிவை முற்றாகநீக்கி எதனையும் காணுதலாவது, அனைத்தும் சிவமயம், அனைத்தும் சத்திமயம் என்றுசெயற்படுதல்.

( 5 ) எல்லார்க்கும் மேலவன் நீஎன்(று) அறிந்(து)உனை ஏத்திஅன்பால்
பொல்லாக் கருமலம் தீர்ந்தான் பொதியப் புகழ்முனிவன்
சொல்லால் புனைதொங்கல் நக்கீரன் சாத்தித் துனிகடந்தான்
நல்லார்க்கு நல்லவ னேசம ராபுரி நாயகனே.

**குறிப்புரை** : கரு= வித்து. கருமலம்= பிறப்பிற்கு வித்தாகிய மும்மலம். தொங்கல்= மாலை - திருமுருகாற்றுப்படை. துனிகடந்தான்= துன்பம் தீர்ந்தான். " எல்லார்க்கும் மேலவன் நீ என்று அறிந்து உனை ஏத்தி அன்பால் " - என்றதொடர் அகத்தியர், நக்கீரர் இருவர்க்கும் உரியது

**பொழிப்புரை** : பிற தெய்வங்கள் அனைத்திற்கும் மேலான தெய்வம் நீயே என்பதை அறிந்து; உன்னை அன்பினால் போற்றி அகத்திய முனிவர் பிறப்பிற்கு வித்தாகிய கொடிய மும்மலம் தீர்ந்தான்; எல்லாத் தெய்வங்களுக்கும் மேலான தெய்வம் நீயே என்பதை அறிந்து சொல்லால் தொடுக்கப்பெற்ற திருமுருகாற்றுப்படையாகிய மாலையை உனக்குச்சாத்தி நக்கீரன் பூதத்தால் நேர்ந்த துன்பம் தீர்ந்தான். திருப்போரூர் நாயகனே! நீ நல்லவர்க்கு நல்லவன் ஆவாய்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் ஏதுவணி.

( 6 ) தோள்குங் குமம்நக்கும் கோக்குழை மாதர்க்கும் தொல்லைமத
வேட்கும் உளம்குழைந் தேனைவி டேல்விண்டு மாமலர்க்கை
வாட்கும் கொடிய மருப்(பு)ஆர் மகிடன் வளைப்பில்உறா(து)
ஆட்கொண்(டு) அருளுகண் டாய்போரி வாழும் மயிலவனே.

**குறிப்புரை** : குங்குமம்= குங்குமச்சாந்து - செஞ்சாந்து. நக்கும்= தடவும். கோக்குழை= பெரியகாதணி. தொல்லை மதவேள்= துன்பம்தரும் மன்மதன். விண்டு= திருமால். மாமலர்க்கை வாள்= திருமகளின் மலர்போன்ற கையின் வாள்ஆகியசெல்வம். மகிடன்= எருமையூர்தியுடைய எமன். வளைப்பில் உறாது= கையகப்படாது

**பொழிப்புரை** : போரூரில் எழுந்தருளியுள்ள முருகனே! தோளில் பூசிய செஞ்சாந்தினைத் தடவும் பெரியகாதணியாகிய குழையணிந்த மகளிர்க்கும், துன்பம்தரும் மன்மதனுக்கும் மனம் வருந்தும் என்னைக் கைவிட்டுவிடாதே. திருமாலின் திருமகளது மலர்போன்ற கைவாள் ஆகிய செல்வம், வளைந்த கொம்புடைய எருமையூர்தியனாகிய எமனின் பாசக் கயிறு ஆகியவற்றில் அகப்படாது என்னை ஆட்கொண்டருள்க.

**இலக்கணக்குறிப்பு** : கண்டாய் - முன்னிலை அசைச்சொல்.

( 7 ) அண்டம் சராசரம் எண்திசை யாவும் அளித்தவளும்
கண்டம் கரிய சிவனும் தமஅம்க ரங்களின்மேல்
மண்(டு)அன்பின் ஏந்தி முறைமுறை தந்து மகிழ்மதலாய்
தொண்டன்(பு) எனக்கும் உளதோதென் போரிச் சுராதிபனே.

**குறிப்புரை** : சராசரம் - சரம் + அசரம்= இயங்குதிணை, நிலைத்திணைப் பொருள்கள். தம= தமது. மண்டு= மிக்க. சுராதிபன்= தேவர் தலைவன்.

**பொழிப்புரை** : திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவர் தலைவனே! அண்டத்தையும் இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்களையும் அனைத்தையும் காத்து அருள்புரியும் அம்மையும், நஞ்சினால் கருமையான கழுத்துடைய சிவபிரானும் தம்அழகியகைகளில் மிக்க அன்புடன் அடுத்தடுத்துத்தரப் பெற்று மகிழும்அவர்களின்மகனே! தொண்டுசெய்வதில் எனக்கு அன்புளதோ!

**விளக்கம்** : சிவனும் பார்வதியும் முருகனை அடுத்தடுத்துத் தந்து பெறுதல் அன்பின் விளைவு.

( 8 ) கொங்கணர் ஆரியர் ஒட்டியர் கோசலர் குச்சரராம்
சிங்களர் சோனகர் வங்காளர் ஈழர் தெலுங்கர் கொங்கர்
அங்கர் கலிங்கர்கன் னாடர் துருக்கர் அனைவருமே
தங்கள்தங் கட்(கு)இறை நீஎன்பர் போரிச் சரவணனே.

**பொழிப்புரை** : திருப்போரூரில் எழுந்தருளியுள்ள சரவணனே! கொங்கணர் முதலாகச்சொல்லப்பெற்ற அனைவரும் உன்னைத் தத்தமக்கு இறைவன் என்று வணங்குவர்.

( 9 ) மான்சூட்(டு) இறைச்சி தேன்தோய்த்(து) அருந்தும் வனசரர்மான்
கூன்கோட்(டு) இளம்பிறை நெற்றிக்கும் வேல்இணைக் கூர்விழிக்கும்
கான்கூட்(டு) அமாமலர் கூந்தற்கும் கொங்கைக்கும் காதல்கொண்டோன்
தேன்கூட்டம் வாழ்பொழில் போரூரன் என்குரு தேசிகனே.

**குறிப்புரை** : சூட்டு= சுட்ட. வனசரர் மான்= வேடர்களின் மானாகிய வள்ளி நாயகி. கோன்கூட்டு= வளைந்தபக்கம். இணை= ஒத்த. கான்கூட்டு= மணமுள்ள. அமாமலர்= அந்தச் சிறந்த மலர். தேசிகன்= அரசன்.

**பொழிப்புரை** : மானினைச்சுட்ட இறைச்சியைத் தேனில் தோய்த்து உண்ணும் வேடர்களின் மானாகிய வள்ளிநாயகியின் வளைந்த பக்கங்களுடைய இளம்பிறை போன்ற நெற்றி, வேல்போன்ற கூரிய விழி, மணமுள்ள அச்சிறந்த மலர்சூடிய கூந்தல், கொங்கை ஆகியவற்றின்மேல் காதல் கொண்டவன்; தேனடைகள் மிகுதியாக உள்ள போரூரில் எழுந்தருளியுள்ள முருகனாகிய என்குருவும் அரசனும் ஆவான்.

( 10 ) கோக்குஞ் சரமத நாற்றம் தவிர்த்துக் குலநரந்தம்
தேக்கும் புழுகு மணம்வீசும் போரிஎம் தேவன்செவ்வேள்
நோக்கும் விழிஅருள் போக்கும் பிணியினை நூபுரத்தாள்
காக்கும் பவம்புக ஒட்டா நமக்(கு)என் கவலைநெஞ்சே.

**குறிப்புரை** : குஞ்சரம்= யானை. தவிர்த்து= இல்லாமல் செய்து. குல நரந்தம்= சிறந்த கத்தூரி. தேக்கும் புழுகு மணம்= மிக்க புழுகின் - புனுகின் நறுமணம். பவம்= பிறப்பு.

**பொழிப்புரை** : தலைசிறந்த யானைகளின் மதநாற்றமின்றி, சிறந்த கத்தூரிமணமுடன், மிக்க புழுகின் - புனுகின் - மணமும்கமழும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தெய்வமாகிய முருகனின் அருள்விழி நோக்கு நமது நோய்களைப் போக்கும்; சிலம்பணிந்த திருவடி பிறக்கவொட்டாது காக்கும். எனவே நெஞ்சே நமக்குக் கவலை ஏன்? கவலை வேண்டா.

( 11 ) ஆயர் குழல்இசை கேட்கும்பணாமுடி ஆ(டு)அரவம்
வாயைஅங் காந்து மணிகா லுதல்வள்ளல் பாடல்கொண்டு
தூய கொடைகொடுத் தாங்(கு)உறும் போரிச் சுராதிபனை
நாயக னைக்கும ரேசனை நாடுவர் ஞானிகளே.

**குறிப்புரை** : பணாமுடி= பெருமைபொருந்திய தலை. அங்காந்து= பிளந்து. காலுதல்[ உமிழ்தல். ஆங்கு= போல.

**பொழிப்புரை** : ஆயர்களின் புல்லாங்குழல் இசைகேட்டு, பெருமைபொருந்திய தலையசைக்கும் ஆதிசேடன் தனது வாயினைப்பிளந்து மாணிக்கத்தை உமிழ்தல்போலவும், சிறந்த பாடலைக்கேட்டு வள்ளல் பாடியவர்க்குக்கொடை வழங்கினாற்போலவும் செயற்படும் திருப்போரூர்த் தேவர்தலைவனை, அண்டத்துத் தலைவனை, குமரப்பெருமானை ஞானியர் விரும்புவர்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் பல்பொருள் உவமையணி.

( 12 ) இடமுறச் சூழும் முழைதொறும் நாகம் எரிபுரையும்
படமணிச் சென்னி எடுத்(து)ஆள்தன் மங்கலப் பந்தரிலே
சுடர்மணித் தண்டினைச் சூழ விளக்கிட்ட சோதிஒக்கும்
தடவரைப் போரிச் சரவண நாயகன் தஞ்)சு)எனக்கே.

**குறிப்புரை** : இடமுற= மலையில் பொருந்திய. முழை= வளை - புற்று. எரிபுரையும் மணி= நெருப்பு ஒத்த இரத்தினம். படச்சென்னி= படமுடைய தலை. ஆள்= பயன்படுத்தும். தடவரை= பெருமைபொருந்தியமலை. தஞ்சு= பற்றுக்கோடு.

**பொழிப்புரை** : பெருமைபொருந்திய மலையுடைய திருப்போரூர் முருகப்பிரானின் பற்றுக்கோடு எனக்கு; மலையில் பொருந்திய புற்றுகள்தோறும் நல்லபாம்புகளின் படமுடைய தலையில் உள்ள நெருப்புப்போன்று ஒளிரும் இரத்தினங்கள், திருமணப்பந்தரில் அழகிய தண்டினைச் சுற்றிலுமொளியுடைய விளக்குகளை ஒத்ததாகும். அவன் பற்றுக்கோடு எனக்கு ஒளிதரும் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : தடவரை : உரிச்சொற்றொடர். இச்செய்யுள் உவமையணியாகும்.

( 13 )
பிடிபார்த்(து) அலற எயினச் சிறார்கள் பிரிந்தகன்றைக்
கொடியால் பிணித்(து)அதன் மேலேறி ஆடும் குளிர்பொழில்சூழ்
அடிவாரப் போரிப் பதிவே லவனைவந்(து) அண்டினன்என்
குடியார்க்கு நல்ல கதிவாய்த்த(து) என்(று)உளம் கொண்டனனே.

**குறிப்புரை** : பிடி=பெண்யானை. எயினர்=வேடுவர். அண்டினன்=அடைந்தேன்.

**பொழிப்புரை** : தன்னைப்பிரிந்த கன்றினைப்பார்த்து, பெண்யானை - தாய் - அலற, வேடுவர்களின் சிறுவர்கள் அக்கன்றினைக் கொடியால் கட்டி அதன்மேல் ஏறி விளையாடும் குளிர்ந்த சோலை சூழ்ந்த அடிவாரமுடைய மலையினைப் பெற்ற போரூர் வந்து முருகனைச் சரணடைந்தேன். என்செயலால் என்வழியினர்க்கும் நல்லகதி வாய்த்தது என்று எண்ணிமகிழ்ந்தேன்.

( 14 )
தோகை நடித்திட வேடச் சிறாருழைத் தோல்பறையை
நாகம் பறித்(து)உலர் வாகைநெற் றால்கொட்ட நாடிஅளி
ஓகைத ரும்பண் இசைபாடும் சந்தன ஒண்பொழில்சூழ்
மாகர் தொழும்திருப் போரூரன் தாள்என் மதிவழியே.

**குறிப்புரை** : தோகை= மயில். உழை= அருகில் இருந்த. நாகம்= குரங்கு. அளிநாடி= வண்டுகள் விரும்பி. ஓகை= மகிழ்ச்சி. மாகர்= தேவர்கள். தாள்வழியே என்மதி= திருவருள் வழிப்பட்டதே என்அறிவு.

**பொழிப்புரை** : மயில் நடனமாட, குரங்குகள் பறித்துஎறிந்த உலர்ந்த வாகைநெற்றால், வேடச்சிறுவர் தம்மிடம் இருந்த தோல்பறைக்கருவியை முழக்க, வண்டுகள் மகிழ்ச்சிதரும் இசையினை விரும்பிப்பாடும் சந்தனச்சோலை சூழ்ந்த திருப்போரூரில் எழுந்தருளியுள்ளவனும், தேவர்களால் தொழப்பெறுகிறவனும் ஆகிய முருகப்பிரானது திருவருள்வழிப்பட்டதே என் அறிவுஆகும்.

( 15 )
மேகங்கள் சூல்கொண்டு சாரல் படிந்து மிகக்குமுற
நாகங்கள் கோடுஇறப் பாயத் தெறித்த நகைத்தரள
மோகம் தரும்குற மின்னார்கள் மேல்உற மொய்த்(து)எதிர் பார்த்(து)
ஆகம் தடவிய போரூர்க் குகன்என் அருள்தந்தையே

**குறிப்புரை** : குமுற= இடிக்க. நாகம்= யானை. கோடு= தந்தம். நகைத் தரளம்= ஒளிரும் முத்து. மொய்த்து= நெருங்கி.

**பொழிப்புரை** : கருக்கொண்ட கார்மேகக்கூட்டம் மலைச்சாரலில் படிந்து மிகவும் இடிமுழக்கம்செய்ய, யானைகள் தம்தந்தங்கள் ஒடியுமாறு பாய்ந்ததால் தந்தங்களிலிருந்து தெறித்த ஒளிரும் முத்துகள் காமமூட்டும் மின்னல்போன்ற குறத்தியர் மேல்தெறிக்க, இதனை எதிர்பார்த்து நெருங்கியவர்கள் அவர்களின் உடம்பைத் தடவிக்கொடுக்கும் திருப்போரூர்க் குகன் எனக்கு அருளும் தந்தையாவான்.

( 16 ) வரைமுத்(து) ஒளிரும் பளிக்(கு)ஆ டரங்கின் மயில்நடித்தல்
புரையில் சசிமண்ட லத்(து)ஆடல் மாதர் புரிவ(து)ஒக்கும்
விரவுற்ற சாரல்அம் போரூர் விசாகன் விரைமலர்த்தாள்
உரையற்(று) உணர்(வு)அற்(று) உயர்இன்பம் ஆகிய உள்ளொளியே.

**குறிப்புரை** : வரை= மலையாகிய யானை. புரையில் மாதர் ஆடல் புரிவது ஒக்கும். புரை= குற்றம். விரவுற்ற= அடைந்த. உள் ஒளி= ஞானம்.

**பொழிப்புரை** : மலைச்சரிவு உடைய போரூர் முருகப்பெருமானின் மணக்கும் திருவடியைப் பெற்றதால், சொல்லின்றி, உணர்வின்றிப் பெற்ற உயர்ந்த ஞானஇன்பம் ; மலையாகிய யானையின் தந்தங்கள் ஈன்ற முத்தினால் ஒளிவீசும் பளிங்கு நடனமேடையில் மயில்நடனமாடுவது வானுலகத்தின் குற்றமற்ற நடனமகளிர் நடனமாடுவதுபோன்றதாகும் - இன்பம்தருவதாகும்.

( 17 ) பளிக்(கு)அறை ஊடு தருக்குழைப் பாயலில் பள்ளிகொண்டே
களிக்குறு மாகந் தருவர்தம் கீதம்உங் காரத்தினால்
விளக்குறு மேல்நிலத் தோகையர் கீதமும் வே(று)அறவே
கிளக்கல் உறும்திருப் போரூரன் அன்பர்தம் கேண்மையனே.

**குறிப்புரை** : தருக்குழை= மரத்தின் இலை. மா கந்தருவர்= தேவரினத்தில் சிறந்த இசைவல்லார். உங்காரத்தினால் விளக்குறு= பலவகையில் உரப்பிச் சொல்வதன்மூலம் பொருளினை விளக்கும். மேல்நிலத் தோகையர்= தேவமகளிர். அறவே கிளக்கல்= முழுவதும் கூறுதல். ( திருப்போரூரன், பளிக்குஅறை ............மாகந்தருவர்கீதம்; உங்காரத்தினால் ...........அறவே வேறு கிளக்கல் உறும் அன்பர் கேண்மையன் என்க )

**பொழிப்புரை** : மரத்தின் இலைகளைப் பரப்பிய படுக்கையில் படுத்துக்கொண்டு மனம்களிக்கும் கந்தர்வர்களின் சிறந்த இசைப்பாடலையும்; பலவகையில் உரப்பிச்சொல்வதன் மூலம்பொருள் விளங்கச்செய்யுமாறு தேவமகளிர் பாடும் சமஸ்கிருதப்பாடலையும் தம்முள் ஒத்தநிலையில் கூறும் அன்பர்களிடம் நட்புடையவன், பளிங்கினால் ஆனஅறையில் எழுந்தருளியுள்ள திருப்போரூர்ப் பெருமான்.

**விளக்கம்** : வேதப்பாடல்கள், எடுத்தல், படுத்தல் நலித்தல். மெலித்தல் ஆகிய நால்வகை உச்சரிப்புடன் பாடப்பெறுவன, இதன்மூலம் பொருள் விளக்கம்பெறச்செய்வன. காரணம், அம்மொழியில் எழுத்துகள் மிகப்பலவும் நால்வகை ஒலிப்பும், அதன்மூலம் பொருள்வேறுபாட்டினை உணர்த்தும் தன்மையும் உடையனவாதலின் அவ்வொலிப்புவகையை " உங்காரம் " என்று அருளினார். எம்மொழியில் பெருமானை வாழ்த்தினாலும் ஊடே இருக்கவேண்டிய பத்திமையே இன்றியமையாதது. எனவே மொழிவேறுபடினும் பத்தியுடன் கூறும்பெருமக்களை " அன்பர் " என்றார். பத்திமையுடன் பெருமானை எம்மொழியிலும் ஏத்தலாம் என்பதைத் திருஞானசம்பந்தர்,

" கல்லால் நிழல்மேய கறைசேர்கண்டாஎன்று
எல்லா மொழியாலும் இமையோர் தொழுதுஏத்த " ( திருநல்லம். 1 )

என்று மொழிவதன் விளக்கமாக அமைந்தது இச்செய்யுள்.

( 18 )

கருநாகத் தொண்டைக் கயம்முனிக் கூட்டங்கள் கல்லுச்சில்லுப்
பொருநாசிக் கேழல் உடன்ஆடும் சாரல்அம் போரிச்செவ்வேள்
இருபாத தாமரை ஏத்தி வணங்கிளந் நாளும்நினைந்(து)
ஒருவா(து) இருந்திலை நெஞ்சேஎன் வீணில் உழன்றனையே.

**குறிப்புரை** : கருநாகம்= கரியநாகப்பாம்பு. தொண்டை= துதிக்கை. கயம்முனி= யானைகன்று. கல்லுச்சில்லு= கருங்கல்துண்டு. பொருநாசி= ஒத்தமூக்கு கேழல்= காட்டுப்பன்றி. ஒருவாது= விலகாமல்.

**பொழிப்புரை** : கருமையான நாகப்பாம்பு போன்ற துதிக்கையுடைய யானைக்கன்றின் கூட்டமும், கருங்கல் துண்டு போன்ற மூக்குடைய காட்டுப்பன்றியின் கூட்டமும் தம்முள்கூடி விளையாடும் மலைச்சரிவுடைய திருப்போரூர் முருகப்பெருமானின் இரண்டு திருவடித்தாமரைகளையும் நெஞ்சே! நாடோறும் நினைந்து வணங்கி அதில் நீங்காது இருக்காமல் வீணே மனம் நொந்தாய். அவனையே நினை.

( 19 )

அகில்ஏந்து நல்ல முகில் ஏய்ந்த கூந்தல் அரிவையர்தம்
நகில்ஏந்(து) ஆர வடம்போல் அருவி நகம்திகழும்
முகில்ஏந்தும் மாடநம் போரூர்க் குகன்பத முண்டகத்தைத்
தகஏந்து நெஞ்சினர் மேல்மத வேள்எய்யத் தான்அஞ்சுமே.

**குறிப்புரை** : ஏந்து= ஊட்டிய. ஏய்ந்த= ஒத்த. ஆரவடம்= முத்துமாலை. நகம் அருவி= மலையருவி. பதமுண்டகம்= திருவடித் தாமரை. எய்ய= அம்பெய்ய - காமமூட்ட.

**பொழிப்புரை** : அகிற்புகையூட்டிய கார்மேகம் ஒத்த கூந்தலுடைய மகளிரின் முலைகள் ஏந்திய முத்துமாலைகள்போல் மலையில்அருவிகள் விளங்கும் மேகம் தவழும் மாளிகைகளுடைய போரூரில் எழுந்தருளியுள்ள நம் முருகப்பிரானின் திருவடிகளைத் தக்கவாறு தம்மனத்தில் கொண்டவர்களுக்குக் காமமூட்ட மதமிக்க மன்மதன் அஞ்சுவான்.

( 20 ) மதுவார்த் திடுகடம் போலே மயக்குறு மாதரைஓர்
கொதுகாக் கருதுறும் காலமுண் டோகொடி யேன்தனக்கு
விதுவால் சலம்தரு கற்சுனை யூடு விளங்குபிடி
சதுராக் குடைந்து விளையாடும் போரிச் சரவணனே.

**குறிப்புரை** : வார்த்திடு= ஊற்றப்பெற்ற.- குடித்த. கடம்= உடம்பு. கொதுகு= கொசு. விது= நிலவு. சலம்தரும் கற்சுனை= நீர்சுரக்கும் சந்திரகாந்தக் கல்லாலான சுனை, சதுர்= மிகுதியாக. குடைந்து= நீராடி.

**பொழிப்புரை** : நிலவின் ஒளியால் நீர்சுரக்கும் சந்திரகாந்தக் கல்லாலான சுனையில், அழகிய பெண்யானை மிகுதியாக நீராடி விளையாடும் திருப்போரூர்ச் சரவணனே! மனிதரைக் கள்குடித்த உடம்புபோல் தடுமாறச்செய்யும் மகளிரை ஒரு கொசுவாக - அற்பமாக எண்ணும் காலம் கொடியஎனக்கு உண்டோ? அதனைஅருள்க.

**விளக்கம்** : நிலவின்ஒளியில் நீர்சுரக்கும் ஒருவகைக்கல்லினைச் சந்திரகாந்தக்கல் என்பர்.

( 21 ) அள்ளித் தெளித்தன்ன கள்ளிவெந் நீழல் அணுகுழைதான்
அள்ளிப் புனல்எனப் பேய்த்தேரை நாடி நலிவதுபோல்
உள்ளிப்பொய் வாழ்வினை ஊர்தொறும் சென்(று)உழலா(து) எனைஆள்
வெள்ளிப்பொ ருப்பினன் மைந்தாதென் போரியில் வேலவனே.

**குறிப்புரை** : வெந்நீழல்= வெப்பம் மிக்கநிழல். அணுகுழை= நெருங்கும்போது. அள்ளிப்புனல்= மிக்க தண்ணீர். பேய்த்தேர்= கானல் நீர்.

**பொழிப்புரை** : கயிலை மலையானுக்கு மகனே! அழகிய போரூர் வேலவனே! கையால் எடுத்துத் தெளித்ததுபோல் விளங்கும் - இங்கொன்றும் அங்கொன்றுமாக விளங்கும் - கள்ளித்தாவரத்தின் வெப்பம் மிக்க நிழலை அணுகும்போது, மிக்க தண்ணீர்போல் விளங்கும் கானல்நீரைக்கண்டு சென்று துன்புறுவதுபோல், பொய்யான வாழ்வைஎண்ணி ஊர்தோறும் சென்று துன்புறாது என்னை ஆண்டருள்வாயாக.

( 22 ) முடைமாற முல்லை குழல்சூடும் ஆய்ச்சியர் மூதளைதான்
கடைதொறும் ஆரத்தின் மார்பில் தெறித்திடக் கன்றுதுள்ளும்
புடைபாய் உழுவை குமுறும்என்று இந்நிலப் போரிஎம்கோன்
படைவேல் துணைஉண்(டு) எமக்குஒரு நாளும் பயம்இல்லையே.

**குறிப்புரை** : முடை= தீயவாசனை. மூதளை= கட்டித்தயிர். ஆரம்= முத்துமாலை. கன்று துள்ளும்= கைவளையல் குலுங்கும். உழுவை= புலி. குமுறும்= சீறும். என்று= என்று கூறப்பெறும்.

**பொழிப்புரை** : குறிஞ்சியும் முல்லையும் மயங்கிய இந்நிலத்தில், புலி சீறுவதுபோல் ஒலிஎழ கட்டித்தயிர் கடையும்ஆய்ச்சியரின் முத்துமாலையணிந்த மார்பில் தயிர்த்துளி தெறிப்பதால் ஏற்படும் தமது உடம்பின் துர்நாற்றம் மாறும்பொருட்டு முல்லைமாலை சூடுவர்,

கடையும்போது அவர்களின் கைவளையல் குலுங்கும். இத்தகு போரூர்த்தலைவனாகிய முருகனின் ஆயுதமாகிய வேல் எமக்குத் துணையாதலின் ஒருநாள்கூடஅச்சமில்லை.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 23 ) பூவையும் கோவும் அசுணமும் நாகமும் பூம்பொறிகான்
சேவலும் சித்திரம் போல்கேட்(டு)உறங்கச் சிறார்ப்பொதுவர்
தூஅரும் தீங்குழல் ஒசை வளர்க்கின்ற தொல்லைமுல்லைத்
தேவரும் தேடும் பொருள்போரி வேலன் திருவடியே.

**குறிப்புரை** : பூவை= குயில் / நாகணவாய்ப்புள். கோ= பசுமாடு. பூம்பொறி கான்= அழகிய புள்ளிகள் ஒளிரும். பொதுவர் சிறார்= இடைகுலச் சிறுவர். தொல்லைத் தீங்குழல் ஓசை= பழைமையான புல்லாங்குழல் இசை. போரி வேலன் திருவடியே தேவரும் தேடும்பொருள்.

**பொழிப்புரை** : குயில், பசு, அசுணமா, நாகப்பாம்பு, அழகிய பொறிகள் ஒளிரும்சேவல் முதலியன இடைக்குலச் சிறுவர்களின் பண்டை இசையாகிய முல்லைநிலத்தவரின் தூய அரிய இனியபுல்லாங்குழல் இசைகேட்டு உறங்கும் திருப்போரூர் முருகப்பிரானின் திருவடியே, தேவர்களும் தாம் பெறும்பொருட்டுத் தேடும் பொருள் ஆகும்.

**விளக்கம்** : இயற்கை எழுப்பிய பண்டை இசை புல்லாங்குழல் இசை. இதன் சிறப்பை,

" ஆடுஅமை குயின்ற அவிர்துளை மருங்கின்
கோடை அவ்வொலி குழல் இசையாக " ( அகநானூறு )

என்பது வலியுறுத்தும்.

ஆனாயர் குழலிசை கேட்டு அனைத்து உயிரினமும் தம்வசம் இழந்ததைப் பெரியபுராணத்திலும்,

" சிறுவிரல்கள் தடவிப் பரிமாறச் செங்கண்கோட.............கோவிந்தன் குழல்கொடு ஊதினபோது;

பறவையின் கனங்கள் கூடுதுறந்து வந்து படுகாடுகிடப்பக்
கறவையின் கனங்கள் கால்பரப்பிட்டுக் கவிழ்ந்து இறங்கிச் செவியாட்ட கில்லாவே "

( திவ்யப்பிரபந்தம் )

இசைக்கு உயிரினம் கட்டுப்பட்டு மெய்ம்மறந்தமையை இலக்கியங்களில் காணலாம்.

( 24 ) கள்தான் நிரம்பி அகஇதழ் கீன்(று)எழு கஞ்சமுடன்
முள்தாள் துவைத்திட மேதி தெறித்(து)ஒளிர் முத்தைஅன்னப்
புள்தான் சினையென்(று) அணைக்கின்ற போரிப்புனிதச் செவ்வேள்
மட்(டு)ஆரும் சேவடி தொட்டால் எமக்குநல் வாழ்(வு)உளமே.

**குறிப்புரை** : கள்= தேன். கீன்று= கிழித்து. எழுகஞ்சம்= மலர்ந்த தாமரை. முள்தாள்= முள்ளுடைய தண்டு. மேதி தெறித்து=எருமை தாவிக்குதிக்க. சினை= முட்டை. அணைக்கின்ற= அடைகாக்கிற. மட்டு= தேன்.

**பொழிப்புரை** : மனமே! தாமரைத்தண்டின் முள்குத்த, எருமை தாவ, தேன்நிரம்பி அகவிதழைக் கிழித்துக்கொண்டு வெளிப்பட மலர்ந்த தாமரைமலரில் ஒளிரும் முத்தினை அன்னப்பறவை தனது முட்டை என்று அடைகாக்கும் போரூரில் எழுந்தருளியுள்ள புனிதனாகிய முருகப்பெருமானின் தேன்பொருந்திய திருவடிகளை மனத்தால் தொட்டஅளவிலேயே நமக்கு நல்வாழ்வு கிட்டும்.

**இலக்கணக்குறிப்பு** : “ ஒளிர் முத்தை அன்னப்புள்தான் சினைஎன்று அணைக்கும் “ - மயக்கவணி.

( 25 ) மடுப்ப மயக்கிடை கொண்டேகு நெஞ்சினை மாற்றிஎன்னை
எடுப்ப(து) உனக்குக் கடன்ஜய னேஎழில் கூர்பழனத்து
உடுப்பு முகக்கொழுச் செல்கின்ற சீதையில் ஊறியநீர்
கடுப்ப வனசப் பிழியூறும் போரியன் காங்கெயனே

**குறிப்புரை** : மயக்கிடை மடுப்ப= மயக்கத்தில் - பாசத்தில். அழுத்த. எடுப்பது= தூக்கிக்காப்பது. உடுப்புமுகம்= ஊடும்பின் முகம். சீதை= உழுபடைச்சால். கடுப்ப= ஒப்ப. வனசப் பிழி= தாமரைத் தேன்.

**பொழிப்புரை** : வலிமையான ஏர்த்தண்டின் நுனியில் உள்ள கொழுச்சென்ற உழுபடைச்சாலில் ஊறிய நீர்போலத் தாமரையின் தேன்பாயும் போரூரினன் ஆகிய காங்கேயனே! ஐயனே! என்னைப் பாசமயக்கில் அழுத்த இழுத்துக்கொண்டுசெல்லும் மனத்தை மாற்றி என்னைத் தூக்கிக் காப்பது உன்கடமையாகும். அருள்புரிக.

**இலக்கணக்குறிப்பு** : உடும்பு, உடுப்பானது எதுகைநோக்கிய செய்யுள் விகாரம். இச்செய்யுள் உவமையணி.

( 26 ) பச்சைக் குடைதிருப் பும்தகைப் பாசடை ஊடுருவ
மெச்சக் கடைசியர் சேல்பாயும் போரிவி சாகன்எம்கோன்
கொச்சைச் சிறியனை இந்நாளும் பண்ணிய கோகனகத்
தச்சற்(கு) இனிஎன்னைப் பண்ணக்கொ டான்இது சத்தியமே.

**குறிப்புரை** : திருப்பும் தகை= திருப்பினாற்போன்ற தகுதியுடைய. பாசடை= பசிய இலை. கடைசியர்= மருதநிலப்பெண்டிர். சேல் = கண்போன்ற கெண்டை மீன். கொச்சை= கீழான. பண்ணிய= பிறப்புத்தந்த கோகனகத் தச்சன்= நான்முகன். பண்ணக்கொடான்= பிறவி தரமாட்டான்.

**பொழிப்புரை** : பச்சைநிறக் குடையைத் திருப்பியதுபோல் விளங்கும்தகுதியுடைய பசிய தாமரை இலையை ஊடுருவுமாறு, மருதநிலப்பெண்டிரின் மெச்சத்தக்க கண்போன்ற கெண்டை மீன்பாயும் திருப்போரூர் விசாகன் - முருகன் ஆகிய எம்தலைவன்; கீழானசிறியவன்

ஆகியஎன்னை, இந்நாள்வரை பிறப்புத்தந்த நான்முகனாகிய தச்சனிடம் பிறவிதருமாறு இனிமேல் ஒப்படைக்கமாட்டான். வீடுபேறு அருள்வான், இது சத்தியமாகும்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 27 ) விருந்(து)உண்டு பின்னைக்(கு) உபசாரம் செய்யும் விதத்தின்நத்துப்
பொருந்து சரோருகத் தேன்உண்டு முத்தமிழ் போரியிலோர்
மருந்(து)உண்(டு) அதன்பெயர் செவ்வேள் அஃ(து)என் மலப்பிணியும்
திருந்தும் உடற்பிணி தன்னையும் போக்கிடும் சித்தம்இதே

**குறிப்புரை** : பின்னைக்கு= பிறகு. நத்து= சங்கு. சரோருகம்= தாமரைமலர். மலப்பிணி= மும்மலநோய். திருந்தும் - திருந்துமாறு அருளும். சித்தம் இதே= அதன் திருவுள்ளம் இதுவேயாகும்.

**பொழிப்புரை** : விருந்து ஊட்டியபின் விருந்தினர்க்கு உபசாரங்களும் ஒருவர் செய்வதுபோல் போரூரில் விருந்தாக ஊட்டச் சங்குகள் தங்கும் தாமரைத்தேன் உள்ளது; செவ்வேள் என்றபெயருடன் முத்தமிழ்வல்ல மருந்தும் உண்டு. அது எனது மும்மல நோய்கள் திருந்துமாறுசெய்து, நலமுடன் வாழவைக்கும், உடற்பிணிகளையும் போக்கும். அம்மருந்தின் திருவுளம் உடற்பிணி தீர்த்து மலப்பிணிதிருந்துமாறு அருள்வதேயாகும்.

**விளக்கம்** : " உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார் "

என்பது திருமந்திரமாதலின், உடற்பிணி தீர்ப்பதுடன், ஆணவம் கன்மம் மாயை ஆகிய மும்மலப்பிணியும் திருந்துமாறுசெய்யும் என்றார். வாழ்வாங்கு வாழ்வதன்மூலம் மாயை கன்மம் பற்றிய நோய்கள் தீர்ந்தாலும், இவை இரண்டிற்கும் மூலமாகிஆணமலத்தை முற்றாகக்த் தீர்க்கவியலாது; அதன் தீய ஆற்றலை நன்மைசெய்யும் ஆற்றலாக மற்றவே இயலும் ஆதலின் உடற் பிணியை முற்றாகப்
" போக்கிடும் " என்றார், ஆணவத்தின் இறுதிநிலை பற்றிக்கூறவந்த திருவதிகை மனவாசகம் கடந்தார்;

" முத்திதனின் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅநு போகத்தைத் துய்த்தல்அணு - மெத்தவே
இன்பம் கொடுத்தல்இறை இத்தை விளைத்தல்மலம்
அன்புடனே கண்டுகொள்அப் பா " ( உண்மை விளக்கம். 50 )

முதற்பிறப்பிற்குமுன் ஆன்மாவின் அறிவை முற்றாக மறைத்தும், அப்பிறப்பிற்குப்பின் ஆன்மாவின் அறிவைக் கீழ்நோக்கிச் செலுத்தியும் தீதுசெய்துவந்த ஆணவம்; ஆன்மாபெற்ற இருவினை ஒப்பு, மலபரிபாகம், அருட்சத்தி பதிவு ஆகியவற்றால் முழுப்பக்குவநிலை-யுற்றதால், வீட்டின்பம் துய்க்கும் நிலையில், அழியா நிலையினதாகிய ஆணவமலத்தின் தீயபண்புகள் ஒழிய, அது தன்னை மாற்றிக் கொண்டு, இறைதரும் வற்றாமுற்றாப் பேரின்பத்தை ஆன்மாவுக்கு விளைவிக்கிறது. எனவேதான் போரூர் அடிகள் " மலப்பிணியும் திருந்தும் " என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உருவக உவமைவணி.

( 28 ) தண்தா மரையில் அனப்பே(டு) உறஅது தன்அருகே
வெண்தா மரைஇரண்(டு) ஆலுதல் வாணிக்கு வெண்கவரி
கொண்(டு)ஆர வீசுதல் போல்உறும் போரிக் குகன்இருதாள்
கண்டாலும் இன்பக் கடல்வந்து கோக்கும் கருத்தினையே.

**குறிப்புரை** : அனப்பேடு= பெண் அன்னப்பறவை. ஆலுதல் = அசைதல்.ஆர= மனம்குளிர.

**பொழிப்புரை** : தண்ணிய தாமரைமலரில் பெண்அன்னப்பறவை இருக்க, அதனருகில் இரண்டு வெண்தாமரை மலர்கள் அசைவது, கலைமகளுக்கு வெண்மையான இருகவரிகளால் மனம்குளிர இரட்டுவதுபோல் விளங்கும் திருப்போரூர்க் குகனது இருதிருவடிகளைக் கண்ட அளவிலேயே நம்கருத்தில் இன்பக்கடல் வந்து கலக்கும்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 29 ) வண்டுகிண் டக்கஞ்சம் விண்டுதண் தேன்சிந்த வால்வளைகள்
கண்(டு)அயின்(று) இன்புறும் போரூர் முருகன் கழலிணைக்கே
தொண்டுவந்(து) இன்புறு வோர்பாத தாமரைத் தூள்என்சென்னி
கொண்டுவந் தேன்மலம் விண்டேன் பரகதி கூடினனே.

**குறிப்புரை** : கிண்ட= கிளற. விண்டு= மலர்ந்து. வால்வளை= வெண்மையான சங்கு. அயின்று= உண்டு. இன்புறுவோர்= தொண்டுசெய்து இன்புறுவோர். விண்டேன்= சுக்கு நூறானது. பரகது= மேல்நிலை.

**பொழிப்புரை** : வண்டுகள் கால்களால் கிளற, தாமரைமலர் மலர்ந்து தேன்சிந்த, அதுகண்ட வெண்மையான சங்குகள் தேனைப் பருகி இன்புறும் திருப்போரூர் முருகப்பெருமானின் திருவடிகளுக்குத் தொண்டு செய்து இன்புறுகிறவர்களின் திருவடித்தாமரையில் பொருந்திய தூள் என்தலைக்கண் கொண்டேன். அதனால் என்மலங்கள் சிதறின; மேலான வீடுபேறு அடைந்தேன்.

**விளக்கம்** : சந்தனத்தில் பட்டது சந்தனம் மணப்பதுபோல், பெருமானுக்குத் தொண்டுபுரிவோர் திருவடியில் பட்ட தூளும் அருள்மணப்பதாகும். திருவடிஞானம் மணக்கும் அதனைச் சென்னியில் சூடியவர்க்கும் அதுதிருவடிஞானம் வழங்கிப் பரகதி சேர்க்கும் என்றார்.

( 30 ) கன்னியர் ஆடிக் கழித்தகத் தூரி கயல்மணக்கும்
மன்னிய வாவி திகழ்சம ராபுரி மாமயிலோன்
பொன்இயல் கிண்கிணித் தாளையும் தோளையும் போற்றுவையேல்
உன்னிய யாவும் உறும்நெஞ்ச மேஉண்மை உண்மையிதே.

**குறிப்புரை** : கழித்த= நீத்த. உன்னிய நினைத்த. உறும்= வந்துசேரும்.

**பொழிப்புரை** : கெண்டைமீன்கள் மிகவாழும் பெருமை பொருந்திய குளங்கள் மகளிர் நீராடிநீத்த கத்தூரி மணக்கும், அத்தகு திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகனின் பொன்னாலான கிண்கிணி யணிந்த திருவடிகளையும் அவனது தோள்களின் ஆற்றலையும் போற்றுவாயானால், மனமே! நீ நினைத்த நல்லனஎல்லாம் உன்னைவந்து சேரும். இது உண்மை, உண்மை.

**இலக்கணக்குறிப்பு** : உண்மை உண்மை - தெளிவுபற்றியமைந்த அடுக்குத்தொடர்.

( 31 ) வள்ளைக் கொடிச்செவி சைவலக் கூந்தல் வனசமுகம்
தெள்ளூற்ற நீலக்கண் ஆம்பல்செவ் வாய்திக ழும்திகிரிப்
புள்ளும் குயம்அன்னப் பேடு நடையுடைப் பொய்கைமங்கை
நள்ளத் திகழ்கின்ற போரூர் விசாகனை நா(டு)உளமே.

**குறிப்புரை** : சைவலம்= பாசி. தெள்ளூற்ற= தெளிந்த. நீலம்= கருங்குவளை மலர். திகிரிப் புள்ளும்= மலையுடன் நட்புக்கொண்ட. குயம்= முலை. நள்ள= உறவுகொண்ட.

**பொழிப்புரை** : வள்ளைக்கொடியாகிய காது, நீர்ப்பாசி ஆகிய கூந்தல், தாமரையாகிய முகம், தெளிந்த கருங்குவளையாகியகண், அரக்காம்பல் ஆகிய செவ்விதழ், விளங்கும்மலையோடு நட்புக்கொண்ட - மலையாகிய முலைஆகியவற்றுடன் பெண்அன்னநடையுடைய கலைமகள் திருமகள் இருவரும் நட்புடன் விளங்கும் திருப்போரூர் விசாகனாகிய முருகப்பெருமானை உள்ளமே! நாடுவாயாக.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முற்றுஉருவகவணி.

( 32 ) கருப்புத் திரளை.அறுத்துச் செறித்த கனைசகட
மருப்புப் பகட்டைக் கழையால் உழவர்கள் மாறுதொறும்
விருப்புற்ற முத்துத் தெறித்(து)ஒளிர் சாளர வீடுபுகும்
திருப்பெற்ற போரிக் குகன்தாள் அறிஞர்க்குத் தித்திக்குமே.

**குறிப்புரை** : கருப்பு= கரும்பு. திரள்= கூட்டம் சகடம் செறித்த= வண்டியில் கட்டிய. மருப்புப் பகடு= கொம்புடைய எருமை. செறித்த கனை சகடம்= மிகுதியாக ஏற்றிய பெரிய வண்டி. மாறு தொறும்= அடிக்கும்பொழுதெல்லாம். ஒளிர்முத்து. சாரள வீடு புகும்= சன்னல்கள் பெற்ற வீட்டுக்குள் புகும். திரு= வளம்.

**பொழிப்புரை** : உழவர்கள், கரும்புக் கூட்டத்தை வெட்டி, வண்டியில் மிகுதியாக ஏற்றி, கொம்புடைய எருமையைக் கரும்புஆகிய கோலால் அடித்து விரட்டும்பொழுதெல்லாம், விருப்பம்மிக்க முத்துகள், சன்னல்கள் பெற்ற வீடுகளில்எல்லாம் சன்னல்கள் வழியே புகுந்து ஒளிரும் வளம் வாய்ந்த திருப்போரூர் முருகப்பெருமானின் திருவடிகள் அறிஞர்க்கு இனிக்கும்.

**விளக்கம்** : கரும்பில் முத்து விளையும் என்பது இலக்கிய வழக்கு.

( 33 )

கரண்டம் அடிக்கடி நீர்மூழ்கி ஆங்குக் கயல்எடுத்தே
மருண்டமென் நோக்கியர் முன்காட்டல் நும்கண் மலர்விழிக்கு
வெருண்ட கயல்அன்(று) இதுபார்மின் என்று விளம்பல்ஒக்கும்
தெருண்டவர் சூழ்திருப் போரூரின் தேவர் சிரோமணியே.

**குறிப்புரை** : கரண்டம்= நீர்க்காக்கை. வெருண்ட= அஞ்சிய. தெருண்டவர்= அறிஞர் / ஞானியர்.

**பொழிப்புரை** : ஞானியர் வாழும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவர்கட்கெல்லாம் தலைசிறந்த மணியாகிய முருகப்பிரானே! அவ்வூரில் நீர்க்காக்கை நீரில் அடிக்கடிமூழுகி, நீரிலிருந்து கெண்டைமீனைக் கவ்விவெளிப்பட்டு, மருட்சியுடைய மென்மையான பார்வைகொண்ட மகளிர்முன் காட்டுவது, உங்கள் மலர்போன்ற கண்ணுக்கு அஞ்சித்தப்பிய கெண்டைமீன் இதுதானா? பாருங்கள்என்று கேட்பதைஒக்கும்.

**இலக்கணக்குறிப்பு** : அடிக்கடி - இரட்டைக்கிளவி. நோக்கியர் - வினையாலணையும் பெயர். பார்மின் - மின் - முன்னிலைப் பன்மை ஏவல் வினைமுற்று விகுதி. இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

( 34 )

காளைச் சலப்பெயர் நாய்இனம் மூழ்கக் கயம்மடுவில்
ஆளைப் பகட்டுறும் வாளைப் பகட்டினம் அம்பினில்போய்
பாளைக் கமுகின் மிட(று)அறப் பாய்ந்துநெல் பண்ணைபுகும்
கேள்ஒத்த போரிக் குகன்அன்ப ரேஎன் கிளைஞர்களே.

**குறிப்புரை** : சலப்பெயர் காளைநாய் இனம்= ஆண்நீர்நாய்க் கூட்டம். கயம்மடுவில் மூழ்க= ஆழமான குளத்தில் மூழ்க. ஆளைப்பகட்டுறும்= காண்பவரை அஞ்சுவிக்கும். வாளைப் பகட்டினம்= ஆண்வாளை மீன்கள். அம்பினில்= அம்புபோல். நெல் பண்ணை= நன்செய் நிலம். கேள்= உறவு. கிளைஞர்= உறவினர்.

**பொழிப்புரை** : ஆண்நீர்நாய்க்கூட்டம், ஆழமான குளத்தில் மூழ்க, அதனால் காண்பவர்க்கு அச்சமூட்டும் ஆண்வாளை மீன்கள் துள்ளி, அம்புபோல் எழுந்து பாக்குமரத்தின் பாளைஒடியப் பாய்ந்து உறவினன் போல் நன்செய் நிலத்தைஅடையும் திருப்போரூர் முருகப்பிரானின் அன்பர்களே என்உறவினர் ஆவர்.

( 35 )

கருக்கடல் நாய்அடி யேன்புகு தாவகை காத்துமுத்தி
பெருக்குறும் இன்பத்(து) இருத்துகண் டாய்பெரு நீர்க்கரையின்
வருக்கை வெடித்(து)எழு செஞ்சாற்றுச் சேற்றில் வழுக்கிநத்துக்
குருக்கொளும் முத்(து)உமிழ் போரூர்ச் சடானனக் கோக்கொண்டலே.

**குறிப்புரை** : கருக்கடல்= பிறவிக்கடல். இன்பம்பெருக்குறும் முத்தி= இன்பம்மிகுவிக்கும் முத்திப்பேறு. வருக்கை= பலாப்பழம். நத்து= சங்குப்பூச்சி. குருக்கொளும் முத்து உமிழ். குரு= ஒளி. சடானனன்= ஆறுமுகன்.

**பொழிப்புரை** : பெரிய ஏரிக்கரையில் பலாப்பழங்கள் முற்றிவெடித்ததால் தோன்றிய வளமான சாற்றினால்ஆன செற்றில் வழுக்கிச் சங்குகள் ஒளிபொருந்திய முத்துகளை ஈனும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகமான தலைமைசான்ற கார்மேகமே! நாயினும்கீழான நான் பிறவிப்பெருங்கடலில் இனிவீழாது காத்து, மேன்மேலும் இன்பம் பெருகும் முத்திப்பேற்றில் என்னை இருத்துவாயாக.

**இலக்கணக்குறிப்பு** : கருக்கடல் - உருவகம். கண்டாய் - முன்னிலை அசைச்சொல். சடானனக் கோக் கொண்டல் - உருவகம்.

( 36 ) வீட்டின்பம் நாடி இருப்போர் தமக்கும் விடயசுக
நாட்டம்கொண்(டு) ஆங்(கு)அவர் போல்இருப் போர்க்கும் நலனுறவே
காட்டும் உவமைய தாக்கொக்கு நீர்மடைக் கண்இலகும்
தீட்டும் புகழ்கொண்ட போரூரன் வேல்சுரர் தேவதையே

**குறிப்புரை** : விடய சுகம்= உலகப்பொருள்களால் கிடைக்கும் இன்பம். நீர்மடைக்கண் இலகும்= நீரோடும் மடைக்கண் இருக்கும். தீட்டும்= உளமார எழுதும். தேவதை போரூரன் வேல்= தெய்வமாகிய போரூர் முருகனின் வேல்.

**பொழிப்புரை** : தேவர்கட்கெல்லாம் தெய்வமாகிய போரூர் முருகனின் வேல், வீடுபேற்று இன்பத்தை விரும்பி இருக்கின்றவரும், உலகப்பொருள்களால் கிடைக்கும் இன்பத்தை விரும்பி இருப்பவரும் ஆகிய அவ்விருசாராரும் நன்மைபெறும்பொருட்டு; மடைத்தலைக்கண் கொக்கு காத்திருப்பதுபோல் அருளக் காத்திருக்கும்.

**விளக்கம்** : ஓடுமீன் - உலகியல் கருதுவோர். உறுமீன் - வீட்டின்பம் நாடுவோர். கொக்கு - வேல். திருப்போரூர் முருகன்கை வேல், அவரவர் விருப்பத்தை நிறைக்கக் காத்திருக்கும் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் ஒருபுடை ஒப்புமையுடைய உவமையணி.

( 37 ) வாவிக் கரைக்(கு)அரு கேகொக்கு நீழல்வ யங்கதெண்ணீர்
தாவிக் கயல்அதைக் கண்டே வெருவுதல் தன்கனவின்
மேவுற்ற காட்சி நனவில்கண் டாங்கு விளங்கல்உறும்
பூவில் திருத்திகழ் போரூர்க் குகன்பதம் போற்(று)உளமே.

**குறிப்புரை** : வாவி= குளம். கொக்கு நீழல் வயங்க= கொக்குப்பறவையின் நிழல் விளங்க. கயல் அதைக்கண்டே வெருவித் தாவுதல். மேவுற்ற= வந்த. ஆங்கு= போல. தன்நனவில் கண்டாங்கு கனவில் மேவுற்ற காட்சி விளங்கல்உறும். பூ= உலகம்.

**பொழிப்புரை** : குளத்துக் கரையின் அருகே கொக்குப்பறவையின் நிழல் விளங்க, கொக்கின் நிழலைக்கண்ட தெளிந்த நீர்க்குளத்துக் கெண்டைமீன் அஞ்சித்தாவும். அதுபோல உலகில் தெய்விகம் விளங்கும் திருப்போரூர் முருகப்பிரானின் திருவடியை நனவில் போற்றும் உள்ளத்தில் அவர்நனவில் கண்டது போலவே அவரது கனவிலும் அது தோன்றும்.

**விளக்கம்** : மீன் - அடியார். கொக்கு - இறைவன் திருவடி. மீன் கொக்கினை நேரே காணுதல் -அடியார் போரூர் முருகன் திருவடியைக் காணுதல். மீன் நீரில் கண்ட கொக்கின் நிழலையும் கொக்காகவே காணுதல் - உலகப்பொருள்கள் அனைத்தையும் இறைவனாகவே அடியவர்கள் காணுதல் என்று பொருத்துக.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் எடுத்துக்காட்டு உவமையணி.

( 38 ) பச்சை நிறத்த நிறைநீர்க் குடங்கள் பலசுமந்தே
உச்சியில் உற்ற கதிரோனுக்(கு) ஈயும் உயர்ந்துளதெங்(கு)
எச்சம் அறச்செறி போரூர்ச்செவ் வேளை இறைஞ்சிநினைப்
பிச்சநெஞ் சேஅடு கின்றனன் பார்என் பிரதாபத்தையே..

**குறிப்புரை** : நிறைநீர்க் குடங்கள்= நீர்நிறைந்த குடமொத்த இளநீர். உயர்ந்து உள= உயரமாக வளர்ந்துள்ள. எச்சம் அற= குறைவின்றி. பிரதாபம்= தற்பெருமை - ஆணவம். அடுகின்றனன்= சுட்டு எரிக்கின்றேன்.

**பொழிப்புரை** : பச்சைநிறமுடன் நீர்நிறைந்த குடம்போன்ற இளநீர்கள் பலவற்றைத் தாங்கிக்கொண்டு, மிக்க வெப்பத்துடன் வானின் உச்சிக்கு வந்த சூரியனுக்குத்தரும் உயரமான தென்னை மரங்கள் சற்றும்குறைவின்றிச் செறிந்துள்ள போரூர் முருகப்பிரானை நினைப்பித்து வணங்கச் செய்த மனமே! நான் அவனை வணங்கியதன் பயனாக என்தற்பெருமையாகிய ஆணவத்தைச் சுட்டு எரிக்கின்றேன் பார்.

**விளக்கம்** : பெருமானை வணங்கியதன் பயன், மூலமலமாகிய ஆணவமலத்தின் ஆற்றலை நீறாக்குவதே என்றார்.

**இலக்கணக் குறிப்பு** : இச்செய்யுளின் முதல் ஈரடிகள் தற்குறிப்பேற்ற உயர்வு நவிற்சியணி.

( 39 ) சா(று)ஊற்(று) எழுந்து கணுஉடைத்(து) ஓடும் தழைக்கரும்பை
வீ(று)வாழைக் குலையொடும் ஆசினி வீழ்ந்(து)ஒடித்துச்
சே(று)ஆக் கியவயல் போரூர் முருகன்நம் தீ(து)அகற்றிப்
பேறாக் கருணைசெய் தேநெஞ்ச மேதரும் பேரின்பமே.

**குறிப்புரை** : வீறு= செழித்த. வாழைக்குலை= வாழைத்தார். ஆசினி= பலாப்பழம்.

**பொழிப்புரை** : மனமே! செழித்தவாழைத் தாரில் பலாப்பழம் விழ, அவை இரண்டும் சாறு ஊறி வெடித்த - முற்றிய - கணுவின்வழியே வெளிப்பட்டு ஓடும் சாறுடைய தழைத்த கரும்பை ஒடிக்க, அதனால் சேறுஆக்கப்பெற்ற வயல்களுடைய போரூரில் எழுந்தருளியுள்ள முருகன், நமக்கு வரும் தீங்குகளைஎல்லாம் அகற்றி, நற்பேறாகவே அருள்பாலித்துப் பேரின்பம் தருவான்.

( 40 )
பவளக் கொடியில் பிணித்(து)ஊசல் புன்னையில் பார்வைமயல்
குவளைக்கண் கற்கும் மடமாதர் ஆடஅக் கோ(டு)அரும்பைத்
தவளத் தரள மழைபோல் அவர்மெய் தனில்சொரியும்
திவள்உற்ற போரிக் குமரேசன் என்குல தேவதையே.

**குறிப்புரை** : பிணித்து= கட்டி. மயல்பார்வை கற்கும் குவளைக்கண் மடமாதர= காமஇச்சையூட்டும் பார்வையினைக் கற்கும் குவளை மலர்போன்ற கண்களுடைய இளமகளிர். . கோடு= கிளை. தவளத் தரளம்= வெண்மையான முத்து.

**பொழிப்புரை** : காமஇச்சையூட்டும் பார்வையைக்கற்கும் குவளை மலர்போன்றகண்களுடைய இளமகளிர், ஊஞ்சலைப் பவளக்கொடி மூலம் புன்னைமரத்தில் கட்டிஆட, ஊஞ்சல்கட்டியகிளை ஆடுவதால் புன்னை அரும்புகள் வெண்மையான முத்துகள்போல் அவர்களின் உடம்பில் சொரியும். இங்ஙனம்விளங்கும் திருப்போரூர் முருகப்பெருமானே என் குலதெய்வமாகும்.

**இலக்கணக்குறிப்பு** : குவளைக்கண் - உவமத்தொகை. இச்செய்யுள் உவமையணி.

( 41 )
வல்லைத் துரந்த முலைநுளை மாதர் வளைஎறியப்
பல்லைத் திறந்துறும் அக்கவி தாலப் பழம்எறியும்
தொல்லைத் திருத்திகழ் போரூர்க் குகன்பதம் சூடும்சென்னிக்(கு)
இல்லை பிரமன் துயர்உறக் கீறும் எழுத்துகளே.

**குறிப்புரை** : வல்= சூதாடு கருவி. துரந்த= வென்ற. நுளைமாதர்= நெய்தல் நிலமகளிர். வளை= சங்கு. அக்கவி= அங்கிருந்த குரங்கு தாலப்பழம்= பனம்பழம். தொல்லைத்திரு= பண்டுமுதலே தெய்விகம். கீறும்= எழுதும்.

**பொழிப்புரை** : சூதாடுகருவியை வென்ற முலையுடைய நெய்தல்மகளிர், சங்கினை எறிய அதுகண்டு சினத்தால் பல்லைத்திறந்த அக்குரங்கு பதிலுக்குப் பனம்பழத்தை எறியும் ஊரும், பண்டுமுதலே தெய்விகச் சிறப்புடைய ஊருமாகிய திருப்போரூர்க் குகனின் திருவடிகளைத் தலைக்கண் சூடுகிறவர்களுக்கு, அவர்களின் தலையில் நான்முகன் எழுதும் தலைஎழுத்து இல்லை. அத்தகையவர்க்குப் பிறப்பில்லை.

( 42 )
வாடைக்(கு) ஒதுங்கிடப் பார்ப்புகள் வெள்ளை வனசங்கள்மேல்
தேடிப் பெடைஅனம் தன்பால் அணைத்துறும் தீதில்நெய்தல்

நீடத் திகழ்கின்ற போரூர் விசாகன் நிமலபதம்
நாடிக் களிப்பவர்க்(கு) உண்டோ துயர்எனும் நாமங்களே,

**குறிப்புரை** : பார்ப்புகள்= அன்னப்பறவையின் குஞ்சுகள். வெள்ளை வனசம்= வெண்டாமரை மலர். நீட= நீண்டு. நிமலபதம்= இயல்பாகவே மலமில்லாத திருவடி. துயர் எனும் நாமம்= துன்பம் என்கிற பெயர்.

**பொழிப்புரை** : குளிர்காரணமாக அன்னப்பறவைக் குஞ்சுகள் வெண்தாமரை மலருக்குப் போய்விட, அவற்றைத் தேடிக்கண்டு பெண் அன்னப்பறவை தன்னுடன் அணைத்துக்கொள்ளும் குற்றமில்லாது நீண்ட நெய்தல்நிலம் விளங்கும் திருப்போரூர் விசாகனாகிய முருகப்பெருமான் ஆகியவனின் இயல்பாகவே மலமில்லாத திருவடிகளை நாடிக்கண்டு களிக்கின்றவர்க்குத் துயரம் என்கிற பெயரேஇல்லை.

**இலக்கணக்குறிப்பு** : உண்டோ - ஓகாரம் எதிர்மறைப்பொருளது.

( 43 ) செக்கர்க்(கு) இடையில் உடுக்கூட்டம் என்னத் திரைகளினால்
தொக்கப் படும்துகிர் வண்டலின் மீது சுரிமுகங்கள்
கக்கப் படுமுத்(து) ஒளிரும்தென் போரியில் காங்கயனைப்
பக்கத் துடன்பணி வார்அவ ரேசுக பாரணரே.

**குறிப்புரை** : செக்கர்க்கு இடையில்- செவ்வானத்தின் இடையே. உடுக்கூட்டம்= விண்மீன் கூட்டம். தொக்க= தொகுக்க. துகிர் வண்டல்= பவளம்போன்ற வண்டல்மண். சுரிமுகம்= சங்கு. பக்கத்துடன்= அன்புடன். சுகபாரணர்= சுகம் அனுபவிக்கிறவர்.

**பொழிப்புரை** : செவ்வானத்தின் இடையே விண்மீன் கூட்டம் தோன்றினாற்போல, அலைகளால் ஒதுக்கப்படும் பவளம் போன்ற வண்டல் மண்ணின்மேல் சங்குகள் கக்கும்முத்துகள் ஒளிரும் அழகிய போரூரில் எழுந்தருளியுள்ள காங்கேயனாகிய முருகப்பெருமானை அன்புடன் வணங்குகிறவரே சுகம் அனுபவிக்கிறவர் ஆவார்.

**இலக்கணக்குறிப்பு** : பட்சம் என்பது பக்கம் என்று வந்தது. இச்செய்யுள் உவமையணி.

( 44 ) வண்(டு)அணை யாக்கொண்டு கண்தூங்கும் பூங்குழல் மாதரையே
கண்(டு)அனை யாயுனும் காலமுண் டோகடை யேன்தனக்கே
ஞெண்டினம் கேதகைத் தா(து)ஆ தரித்(து)உண்(டு)அறல் நீடுபொய்கைத்
தண்துறை ஞெண்டுடன் ஆடிடும் போரிச் சரவணனே.

**குறிப்புரை** : அணை= தலையணை. அனையாய்= தாயாக. கேதகைத் தாது= தாழையின் தேன். ஆடிடும்= உறவாடும்.

**பொழிப்புரை** : நண்டின் கூட்டம் தாழையின் தேனை விரும்பிஉண்டு, அறல்மணல் மிக்க குளத்துத் தண்ணியதுறையில் வாழும் நண்டுகளுடன் உறவாடும் திருப்போரூர் அருள்தரு

சரவணனே! தனது மலர்சூடிய கூந்தலில் மொய்க்கும் வண்டுகளையே தலையணையாகக் கொண்டு உறங்கும் மகளிரைத் தாயாக எண்ணும் காலம், கீழான எனக்கு உண்டோ ! இல்லையேல் அதனையுண்டாக்கு.

**இலக்கணக்குறிப்பு** : உண் டோ - வினாஓகாரம்.

( 45 ) சந்திர காந்த மணிமாடத் தூடுதன் சாயைகண்(டு)ஓர்
பைந்தொ மாது தலைவனோ(டு) ஊடப் பரிந்(து)அவனே
சுந்தர ஆடி நிழல்காட்டி இன்புறு சொல்புகலும்
செந்திருப் போரிக் குகனைக்கண் டோர்க்(கு)உண்டு சித்திகளே.

**குறிப்புரை** : மாடம்= உப்பரிகை. சாயை= நிழல். பரிந்து= அன்புடன். ஆடி சுந்தர நிழல்= கண்ணாடியில் அழகிய நிழல். செந்திரு= திருமகள். சித்தி= மோட்சம் - வீடுபேறு.

**பொழிப்புரை** : சந்திரகாந்தக் கல்லாலான அழகிய உப்பரிகையில் தன்நிழலைமட்டும் கண்டு, பசிய வளையல் அணிந்தஒருத்தி, தன்தலைவனுடன் ஊடல்கொள்ள,அவன்மிக்க அன்புடன்கண்ணாடி ஒன்றில் அழகிய தன்நிழலைக்காட்டி இன்சொல் கூறிஅமைதிப்படுத்தும் சிறப்புடையதாகிய திருமகள் வாழும் திருப்போரூர் முருகப்பெருமானைக் கண்டு வணங்கியவர்கட்கு வீடுபேறு உண்டு.

( 46 ) ஏதம் கருதினர் செல்மின்என் றேயும் இதம்கருதும்
போதம் சிறந்தவர் வம்மினென் றேயும் புகல்வனபோல்
வாதம் செறியக் கொடிஆடும் போரி வரதன்தண்டை
நாதங்கள் யோகியர் யோகினில் காண்குறு நாதங்களே.

**குறிப்புரை** : ஏதம்= குற்றம் - தவறு. செல்மின்= வெளியேறுங்கள். என்றேயும்= என்றும். இதம் கருதும்= நன்மையானவற்றை எண்ணும். வாதம் செறிய= விவாதம் சிறக்க. வரதன்= மேலானவன். தண்டை நாதங்கள்= தண்டையின் பலவகை இனிய ஒலிகள்.

**பொழிப்புரை** : யோகியர் தமது யோகநிலையில் கேட்கும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகப்பிரானது தண்டையின் ஒலிகள்; விவாதம் சிறக்கும்பொருட்டுச் சிறந்தகருத்தைத் தவறாகக் கருதுவோர் வெளியேறுங்கள் என்றும்; நன்மையானவற்றை எண்ணும் அறிவில் சிறந்தோர் வாருங்கள் என்றும் விவாத மண்டபக் கொடிகள் பறப்பன போன்றனவாகும்.

**விளக்கம்** : பெருமானின் தண்டைஒலிகள் நன்மையானவற்றை எண்ணும்அறிவில் சிறந்தோர் வாருங்கள் என்றும், அவற்றைத் தவறாகக் கருதுவோர் வெளியேறுங்கள் என்றும் யோகியர் மனத்தில் ஒலிப்பதுபோல், விவாதமண்டபக்கொடிகள் அறிவில் சிறந்தவர்களை வாருங்கள் என்றும் மற்றவர் வெளியேறுங்கள் என்றும் முன்னும் பின்னும் அசைந்து பறந்தன என்க.

மதுரையின் உட்புகும் கோவலன் கண்ணகி இருவரையும் நோக்கி; மதுரைக்கோட்டைமதிலிற்கட்டிய கொடிகளின்இருபுற அசைவையும் இளங்கோவடிகள்;

" வாரல் என்பனபோல் மறித்துக்கை காட்ட "
என்று தற்குறிப்பேற்றுவார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமைத்தற்குறிப்பேற்றவணி.

(47 ) தேர்ஊர் இரவி வலவன்கை மீது செழுங்கொடிகள்
ஏர்ஆகத் தாக்குதல் எங்கோன் அயிலொளிக்(கு) எய்தும்உன்கோல்
நேரோசொல் நில்என்று போரூர்கை கொண்டு நிறுத்தல்ஒக்கும்
சீரூரும் இந்நக ரேகயி லாயம் தெளிந்தவர்க்கே.

**குறிப்புரை** : **இரவி=** சூரியன். வலவன்= தேரோட்டி. ஏராக= அழகுற. கோல்= சாட்டை. நேரொ= ஒப்பாகுமோ. கைகொண்டு= தன்கையால்.

**பொழிப்புரை** : சிறப்புப்பொருந்திய இந்தப்போரூரே கயிலாயம் என்பதைத் தெளிவாக அறிந்தவர்க்கு; சூரியன் ஏறிவரும் தேரினை ஓட்டுகிறவனின் கையில், போரூரில் பறக்கும் நீண்டகொடிகள் அழகுறத் தாக்குதல், என்அரசனாகிய முருகப்பிரானது வேலின்ஒளிக்கு உனது சாட்டையின்கோல் ஒப்பாகுமோ ? நில் என்று தடுத்து நிறுத்துவதுபோன்று விளங்கும்.

**இலக்கணக்குறிப்பு** : நேரோ - ஓகாரம் வினாப்பொருளது. இச்செய்யுள் உவமையில் பிறந்த உயர்வு நவிற்சியணி.

( 48 ) மனப்பரி சோர இறுமாந்து நாவி மதம்பொழியும்
தனக்களிற்(று) அன்ன முருகா குகாஎன்று தானுரைப்ப
புனக்கிளி கற்கின்ற போரூர் இறையைப் புகழ்ந்தவரை
சினக்கனல் காமக் கனலும்விட்(டு) ஓடும் திசைப்புறனே.

**கூட்டுமுறை** : இறுமாந்து .....அன்ன மனப்பரி சோர, முருகா......திசைப்புறனே ஓடும்.

**குறிப்புரை** : இறுமாந்து= தலைநிமிர்ந்து. நாவி பொழியும் மதம் = கத்தூரியின் மிக்க மணம். தனக்களிறு= முலைகளாகிய யானைகள். மனப்பரி சோர= மனமாகிய குதிரையின் ஆற்றல் வற்ற. புனக்கிளி = கொல்லையில் உள்ள கிளிகள். திசைப்புறன்= எட்டுத்திசைகட்கும் அப்பால்.

**பொழிப்புரை** : தலைநிமிர்ந்து, கத்தூரியின் மிக்கமணம் கொண்ட முலைகளாகிய ஆண்யானைகள் போன்ற மனக்குதிரை தன்ஆற்றலில்வற்ற, திருப்போரூர் முருகப்பெருமானை, முருகாஎன்றும் குகாஎன்றும் ஒருவர் புகழ அச்சொற்களைத் தோட்டத்தில் உள்ளகிளிகள் கற்கும்சிறப்புடையது திருப்போரூர். இங்ஙனம் புகழ்கிறவரைக் கைவிட்டுச் சினம் காமம் ஆகிய நெருப்புகள் எட்டுத்திசைகட்கு அப்பால் ஓடும்.

**விளக்கம்** : சினம், காமம் ஆகியவற்றின் வலிமை, விரைந்து செயற்படல் ஆகியவற்றை முறையே குறிப்பன தனக்களிறு, மனப்பரி ஆகிய உருவகங்கள்.

( 49 ) மதிகொண்டபூச்சக்ர வாளக்குடை வருநிழல்கீழ்
துதிகொண்ட யானைப் பிடர்மேல் வரும்அச் சுகம்தனிலும்
நதிகொண்ட பேரன்பி னால்போரி வேலனை நண்ணிஇன்பக்
கதிகொண்ட மேலவர் கால்தலை தாங்கல் கனசுகமே.

**குறிப்புரை** : சக்கரவாளக்குடை= வட்டவடிவமான குடை. துதி= துதிக்கை. நதிகொண்ட= பேராறு போன்ற. இன்பக்கதி= இன்பநிலை. கனசுகம்= மிக்க *இன்பம்*.

**பொழிப்புரை** : நிலவுபோன்று வெண்மையான மலர்களாலான வட்டவடிவமான வெண்கொற்றக்குடை நிழலில், துதிக்கையுடைய யானையின் பிடரிமேல் அமர்ந்து வரும் அந்தஇன்பத்தைவிட, பேராறு போன்ற மிக்க அன்பினால் திருப்போரூர் முருகப்பிரானை அடைந்து வணங்கி, இன்பநிலைபெற்ற மேலானவர்களின் கால்களைத் தலையில் தாங்குதல் மிக்க இன்பம் தருவதாகும்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 50 ) அளகா புரிஅன்ன பட்டணத் தேசுதை யால்வனைந்த
களவார் முகில்படி மாடத்தி னூடு களித்தலினும்
புளகா டவியெழ மெய்ப்போரி வேலவனைப் போற்றிஉய்வார்
வளவார் புறத்திண்ணை வைகுதல் ஏதமில் மாசுகமே.

**குறிப்புரை** : சுதையால் வனைந்த= அமுதத்தால் கட்டப்பெற்ற. களவார்= கருமைமிக்க. புளகாடவி எழ= உடம்பின்மயிர்க்காடுசிலிர்க்குமாறு. மெய்= ஞானம். வளவார்= தகுதியானவர். புறத்திண்ணை= வீட்டின் வெளிப்பக்கத்திண்ணை. வைகுதல்= வாழ்தல்.

**பொழிப்புரை** : குபேரனுடைய அளகாபுரி போன்ற பட்டணத்தில். அமுதத்தால் கட்டப்பெற்றவீட்டின் கருமையான மேகம்படியும் மாடியில் தங்கிக் களிப்பதைவிட, உடம்பின்மயிர்க்காடு சிலிர்ப்ப, ஞான வடிவனான திருப்போரூர் முருகப்பிரானைப் போற்றி ஈடேற்றம் பெற்ற தகுதிவாய்ந்தவரது வீட்டின் புறத்தேயுள்ள திண்ணையில் வாழ்வது குற்றமில்லாத பேரின்பம் தருவதாகும்.

( 51 ) உள்ளக் கவலை எலாம்ஒழிந் தேன்ஒழி யாதுசெயும்
கள்ளக் கருமங்கள் யாவும்விண் டேன்கலை வாணியுடன்
வள்ளக் கமல மலர்மாது தந்(து)அருள் வாழ்(வு)அடைந்தேன்
தெள்ளத் தெளிந்தனன் போரூர் முருகனைச் சேவைசெய்தே.

**குறிப்புரை** : கள்ளக் கருமம்= வஞ்சனையான செயல் விண்டேன்= பிரிந்தேன். அருள் வாழ்வு= ஞானம் மற்றும் செல்வவாழ்வுகள்.

**பொழிப்புரை** : திருப்போரூர் முருகபிரானைக் கண்டுவணங்கி, நான் என்மனக்கவலை யாவும் தீர்ந்தேன், இடையறாது செய்துகொண்டிருந்த வஞ்சனையான செயல்கள் அனைத்தையும் பிரிந்தேன், பெரிய கிண்ணம்போல்மலர்ந்த வெண்டாமரை செந்தாமரைகளில் வீற்றிருக்கின்றவர்களாகிய கலைமகள் அருளிய ஞானவாழ்வும், திருமகள் அருளிய செல்வவாழ்வும் ஒருசேரப்பெற்றேன். இதனால் வாழ்வின் பயனைத் தெளிவாகப்பெற்றேன்.

**விளக்கம்** : வாழ்வின்பயன், ஞானமும் செல்வமும் பெற்று இவற்றுடன் தெளிவும்பெற்று வாழ்ந்து சாவா மூவாவீடுபேறு பெறுவது. அவை பெற்றேன் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : அடைந்தேன் - தெளிவுபற்றிவந்த காலவழுவமைதி.

( 52 ) பூதர வில்கொண்(டு) அவுணரை மாய்த்த புராரிமைந்தன்
ஆதர வால்அணிப் போரூர் இருந்(து)இங்(கு) அவன்அருளால்
சீதரன் நன்மரு காமுரு காஎன்று செப்பினன்பின்
தாதரம் போல்உறும் தீவினை யாவும் தணந்தனவே.

**குறிப்புரை** : பூதரம்= மேருமலை. புராரி= சிவபிரான். சீதரன்= திருமால். தாதரம்= தாது + அரம்= இரும்பாலான அரம். தணந்தன= விட்டொழிந்தன.

**பொழிப்புரை** : மேருமலையை வில்லாக ஏந்தி மூன்றுஅசுரரையும் மாய்த்த சிவபிரானுக்கு மகனாகிய முருகன் அருளால், அழகிய போரூரில் வாழ்ந்து, அவன் அருளால், திருமால் மருமகனே! முருகா! என்று அழைத்தேன். அதன்பின் இரும்பினால் ஆன அரம்போல் என்னை அழித்துக்கொண்டிருந்த தீவினைகள் யாவும் என்னை விட்டொழிந்தன.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 53 ) வட்டாடல் போலப் பிறப்பதும் சாவதும் ஆக்கிஎன்றும்
ஒட்டாரம் செய்கின்ற மாயை உணர்ந்தும் உணரஒட்டா(து)
அட்டாவ தானம் செயும்சீ வரைப்பொய்மை யாய்இருத்தும்
கட்டாணி யானமுத் தேசம ராபுரிக் காங்கெயனே.

**குறிப்புரை** : வட்டாடல்= சூதாடுதல். ஒட்டாரம்= பிடிவாதம். அட்டாவதானம்= ஒரேசமயத்தில் எட்டு - - காரியங்கள் செய்தல். சீவர்= மக்கள். கட்டாணி= மிக உறுதி.

**பொழிப்புரை** : மிகஉறுதியான முத்தே! போரூரில் எழுந்தருளியுள்ள காங்கேயனே! எண்வகைக் காரியங்கள் செய்யும் மக்கட்கும் பிறப்பையும் இறப்பையும் உண்டாக்கி, பிடிவாதம் செய்கின்ற மாயை பொய்யானதாய் இருந்தும் அதனை அம்மாயை உணரமுடியாமல் தடுக்கும்.

**விளக்கம்** : பலவகைக்காரியங்கள் செய்வது மாயையேயாயினும், தன்னை அம்மாயை நாம் உணருமாறு செய்வதில்லை என்றார்.

( 54 ) ஆள்வேட்டம் ஆடும் அயில்விழி மாதர் அமைகடந்த
தாள்வேட்ட புன்நெஞ்ச மேஅது சீவரைச் சூழ்ந்துகொண்டே
வேள்வேட்டம் ஆடுவ(து) ஆங்கேகல் போரி விசாகன்இரு
தாள்வேட்டு நாடுதி மேல்வீட்டின் இன்பம் தழைத்(து)உறுமே.

**குறிப்புரை** : ஆள்= ஆண்மக்கள். வேட்டம்= வேட்டை. அயில்= கூர்மை. அமை கடந்த= மூங்கிலை வென்ற. தாள் வேட்ட= கால்களை விரும்பிய. அது= அவ்வெண்ணம். சீவர்= உயிரினத்தை. ஆங்கே= அப்போதே. வேள்வேட்டம்= மன்மதவேட்டை. கல்= மலை. மேல்வீடு= வீடுபேறு.

**பொழிப்புரை** : ஆண்மக்களை வேட்டையாடும் கூர்மையான விழிகளுடைய பெண்களின் மூங்கில் போன்ற காலினைவிரும்புகிற அற்பமனமே! உன்விருப்பம் உயிரினத்தைச் சூழ்ந்துகொண்டு அப்பொழுதே காமவேட்டம் ஆடுவதாகும். போரூர் மலையில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானின் இருதிருவடிகளை விரும்பு. செழித்த அவ்விருப்பத்தால் வீடுபேற்றின்பம் வாய்க்கும்.

**இலக்கணக்குறிப்பு** : மாதர்கால் வேட்டு என்றது இடவாகுபெயராய் அவர்தம் அல்குல் குறித்தது.

( 55 ) ஆறு சமயரும் தம்மில்ஒவ் வா(து)அங்(கு) அலைவ(து)என்னே
தேறும் அறிவினர் எல்லாம் அறிந்தும் தெளிந்திலரே
பேறு தரும்தெய்வம் யாவைக்கும் யான்பெரும் தேவன்என்றே
வீறு முகம்கொண்டு போரூர் முருகன் விளக்கியதே.

**குறிப்புரை** : ஒவ்வாது= ஒத்துப்போகாது. தேறும்= தெளிந்த. பேறு= நற்பேறு. வீறு= வெற்றி.

**பொழிப்புரை** : சைவம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம், சௌரம், சாக்தம் ஆகிய ஆறுசமயத்தினரும் தம்முள் ஒத்துப்போகாது தத்தம் சமயமே உயர்ந்தது என்றுகூறி அலைவது வியக்கத்தக்கது. எல்லாம் அறிந்தும் இத்தெளிந்த அறிவினர் தெளிவுபெறவில்லையே! நற்பேறுதரும் அனைத்துத் தெய்வங்களுக்கும் நானே தலைமைத் தெய்வம் என்பதை ஆறுதிருமுகங்களினால் திருப்பேரூர்த்தெய்வம் விளக்குகிறது.

**இலக்கணக்குறிப்பு** : ஆறு சமயர் - தொகைக்குறிப்பு.

( 56 ) மற்றவர் நிற்க மெய்ஞ்ஞானி கள்வம்மின் வகுத்(து)உரைக்கேன்
உற்றது கேண்மின்எம் போரூர் முருகன் உயர்கதியை
நற்றமிழ்க் காழிவந்(து) எண்ணிலி பேர்க்கு நயந்(து)அளித்தான்
கொற்றம் அவன(து) அலா(து)எவர்க்(கு) உண்(டு)இனிக் கூறுமினே.

**குறிப்புரை :** மற்றவர்= ஞானியர் அல்லார். வம்மின்= வாருங்கள். வகுத்து= இனம்பற்றிப் பிரித்து. உற்றது= நடந்தது. காழிவந்து= சீர்காழிக்குவந்து. கொற்றம்= வெற்றி.

**பொழிப்புரை :** ஞானியரல்லாதார் தவிர மெய்ஞ்ஞானியர் மட்டும் வாருங்கள். உண்மையை இனம்பிரித்துக் கூறுகிறேன். நடந்ததைக்கேளுங்கள். எமது போரூர் முருகப்பிரான், நற்றமிழ்ச் சீர்காழிக்கு திருஞானசம்பந்தராகவந்து எண்ணற்றவர்க்கு உயர்கதியாகிய வீடுபேற்றை விரும்பி அளித்தான். இத்தகைய வெற்றி அவரைத்தவிர வேறுயார்க்கும் இல்லை. எனவே நற்பேறுதரும் தெய்வங்களுள் அவனே பெருந்தெய்வம்.

**விளக்கம்** : சிவம்பெருக்கும் திருஞானசம்பந்தர், சிவபாத இருதயர்க்குப் பகவதியார் மணிவயிற்றில் ஈரைந்து திங்களிலும் நலம்சிறப்பப் பிறந்தவர். என்ற சேக்கிழார்பெருமான் வாக்கினையும்( பெரிய புராணம் பா1923 ; பா 1924 ) " பெம்மான்முருகன் " பிறவான் இறவான் " என்ற அருணகிரியாரின் கந்தர் அநுபூதியையம் உணந்த பெருமக்கள் - அருளார்கள் - அறிஞர்கள்; பிறவிஎடுத்துவந்த திருஞானசம்பந்தரை முருகப்பெருமானாகக் கூறுவது விந்தையினும் விந்தை. இது அக்காலச்சான்றோராகிய, அருளாளராகிய பெருமக்களையும் இவ்வாறு கூறச்செய்த காலக்கட்டுப்பாட்டை - ஆட்சி அதிகார வலிமையை உணர்த்துகிறது. " அரசாங்கக்கோழிமுட்டை அம்மிக்கல்லையும் உடைக்கும் " என்பதற்கு இதுவே சான்று.

( 57 )

கரும்பால் செய்வேலி சுரும்(பு)ஆர்க்கும் போரிஅம் காங்கெயன்
திரும்பாச் சுகம்தரு வீ(டு)ஈவ தற்கும் சிறப்புடனே
பெரும்பால் திருத்தரு பெற்றிக்கும் தேவர் பிறர்இலைஎன்(று)
இரும்பால் கடல்துயின் றோன்நெய்யின் ஊடுகை இட்டனனே

**குறிப்புரை** : செய்வேலி= கட்டப்பெற்ற வேலி. சுரும்பு= வண்டுகள். திரும்பாச்சுகம் தரு வீடு= பிறவிதராததும் பேரின்பம் தருவதும் ஆகிய வீடுபேறு. பெரும்பால்= பாற்கடல். திருத்தரு பெற்றி= திருமகள் தரும்செல்வம். துயின்றோன்= அறிதுயில் கொண்ட திருமால். நெய்யின் ஊடு= ( திருமகளை மணந்து கொள்ளும்) நேயத்தின் - அன்பின் - மூலம். கையிட்டனன்= தலைப்பட்டான் - வளர்ந்தான்.

**பொழிப்புரை:** கரும்பினால் ஆன வேலியில் வண்டுகள் ஆரவாரிக்கும் போரூரில் எழுந்தருளியுள்ள அழகிய முருகப்பிரான்தான் மற்று ஈண்டு வாராத இன்பந்தரும் வீடுபேற்றினைத் தருவதற்கும்; பெரிய பாற்கடல் தந்த திருமகள் தரும் செல்வச்சிறப்பிற்கும் உரியவனே தவிர, பிறரால் இவற்றை வழங்க இயலாது என்பதனால், பெரிய பாற்கடலில் அறிதுயில் கொண்ட திருமால் அவ்விருவரிடத்தும் அன்பு காட்டியதன்மூலம் வளர்ந்தான்.

**விளக்கம்** : திருமால், முருகனிடத்தும் திருமகளிடத்தும் அன்புகாட்டியதாவது : திருமகளை மணந்துகொண்டு மார்பில் வைத்துப்போற்றுதல், முருகனை மருமகனாக்கிக்கொண்டமை ஆகியனவாகும்

( 58 )

வேதன்எங் கேஅவன் தாதைஎங் கேவிண்ணின் நண்ணுபுரு
கூதன்எங் கேமிகு தேவரெங் கேகுறை யாததவப்
போதர்எங் கேஅறம் ஆதிஎங் கேதிருப் போரியில்வாழ்

நாதன்எம் கோன்அவ ரைப்போலச் சூரையும் நாடிடிலே.

**குறிப்புரை** : வேதன்= நான்முகன். தாதை=தந்தை = திருமால். நண்ணு= வாழும். புருகூதன்= இந்திரன். தவப்போதர்= தவஞானியர். சூர்= சூரன்.

**பொழிப்புரை** : திருப்போரூரில் எழுந்தருளியுள்ள எமது தலைவனாகிய முருகப்பெருமானைப் போலவே, சூரபத்மனையும் முருகப்பிரானுடன் ஒக்கவைத்துச் சிறந்தவனாக எண்ணினால், வானுலகில் வாழும் நான்முகன், அவனுக்குத்தந்தையாகிய திருமால், தேவேந்திரன், தேவர்கள் மற்றும்குறைவற்ற தவத்து ஞானியர், அறவோர் முதலிய யாரும் இல்லை. ( சூரபத்மன் இருந்தால் முற்கூறப்பெற்றோர்யாரும் இல்லை என்றார். )

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் சொற்பொருள் பின்வருநிலையணி.

( 59 ) திருநீல கண்டம்வெந் தீவினை தீண்டப் பெறாஎனவே
கருநீல கண்டனைப் பாடி அடியரைக் காத்தவன்எம்
உருமேல் இருந்த பிணியையும் மாற்றுவன் உண்மைநெஞ்சே
இருநீல வாவிநம் போரூர னைப்பணிந்(து) ஏத்துவையே.

**குறிப்புரை** : வெம் தீவினை= கொடிய தீவினைகள். தீண்டப்பெறா= அண்டமாட்டா. பாடி = போற்றி. காத்தவன்= காத்த திருஞானசம்பந்தர். உரு= பிறவி. பிணி= பிறவிநோய். இருநீல வாவி= நீலநிறம்பொருந்திய மிகப்பெரிய நீர்நிலை - கடல்.

**பொழிப்புரை** : அழகிய நீலநிறக்கழுத்ததுடைய சிவபிரான் அருளால் தீயூழ்கள் என்னை நெருங்கமாட்டா. கரிய நீலகண்டனாகிய அவனைப்போற்றி அடியவர் நோய்களைத் திருஞானசம்பந்தர் தீர்த்துக் காத்தார். நெஞ்சே! இது உண்மை. எனவே நீலநிறத்துடன் கூடிய மிகப்பெரியகடலுடைய போரூர் முருகப்பிரானை வணங்கிப் போற்று. உன்பிறவிக்கண்ணதான பிறவிநோயையும் மாற்றுவான்.

**விளக்கம்** : சிவபிரான் வேறு முருகன்வேறு இல்லை. “ யாமும் அவனும் வேறலன் “ என்பது கந்தபுராணச்செய்தி. இதனைக் கருத்தில் கொண்டுஅமைந்தது இச்செய்யுள்.

( 60 ) அஞ்ஞானத் தால்அடி யேன்பிழை செய்யினும் ஆர்அருள்சேர்
மெய்ஞ்ஞானத் தாய்பொறுத்(து) ஆட்கொள்ள வேண்டும் வியன்மறைதேர்
செஞ்ஞானத் தார்புகழ் போரூர் முருக செகம்உயிராம்
பொய்ஞ்ஞானக் கூட்டத்துக் குள்புறன் ஆகிய பூரணனே.

**குறிப்புரை** : ஆர் அருள்= நிறைவான அருள். வியன்= மிகப்பெரிய. செஞ்ஞானத்தார்= சிறந்த ஞானியர். செகம் உயிர் ஆம்= உலக உயிர்களாகிய. புறன் ஆகிய= வேறுபட்ட.

**பொழிப்புரை** : மிகப்பெரிய மறைகளை ஆராய்ந்த சிறந்தஞானியர் புகழும் போரூர் முருகப்பிரானே! பொய்அறிவுஉடைய உலகஉயிரினத்தின் வேறான பூரணப்பொருளே! நான்என்

அறியாமை காரணமாகப் பிழைசெய்தாலும் நிறைவான அருளுடைய மெய்ஞ்ஞானியே! நீ என்பிழையைப் பொறுத்து அடிமையாக என்னை ஏற்றருள வேண்டும்.

**விளக்கம்** : “ பிழைத்தவை பொறுக்கை எல்லாம் பெரியவர் கடனே “ என்கிறார்.

( 61 ) புரம்கொன்ற தேவெள்ளி மாமலை நீலப் புயமலைமேல்
உரம்கொண்(டு) எடுத்தவன் ஈரைந்து சென்னியும் ஊ(டு)உறவே
கரம்கொண்ட வாளியி னால்எய்த மாயன் கனமருகா
திரம்கொண்ட போரி முருகாளன் தீவினை தீர்த்தருளே.

**குறிப்புரை** : புரம்கொன்ற= முப்புரங்களை அழித்த. தே- தெய்வம் - சிவபிரான். வெள்ளிமாமலை= கயிலைமலை. நீலப்புய மலை= கரிய தோள்களாகிய மலையுடைய இராவணன். கனசென்னியும்ஊடு உற= கூட்டமான தலையிடையே ((பத்துத்தலை) பொருந்த. வாளி - அம்பு. திரம்= நிலைத்த - அழிவில்லாத.

**பொழிப்புரை** : முப்புரங்களை அழித்த சிவபிரானின் கயிலைமலையை, கருமையானதோள்மலையால் வலிமையுடன் தூக்கமுயன்ற கைகளுடைய இராவணனின் கூட்டமான பத்துத்தலைகளையும் பொருந்தத் தனது கையில் ஏந்திய அம்பினால் எய்த இராமனின் - திருமாலின் மருமகனே! அழிவில்லாத போரிமுருகப்பெருமானே! என்தீவினைகளை ஒழித்தருள்க.

**இலக்கணக்குறிப்பு** : எடுத்தவன் - வினையாலணையும் பெயர்.

( 62 ) நெஞ்சைக் கலக்குறும் சேல்ஓர் இரண்டுடை நேரிழையார்
வஞ்சக் கலவிமெய் என்றேமயங்கினை வன்னெஞ்சமே
துஞ்சற்கும் வந்து பிறத்தற்கும் ஏ(து)அது சொல்கதிசேர்ந்(து)
உஞ்சற்கு நீதிருப் போரூர்க் குகனை உறப்பணியே.

**குறிப்புரை** : சேல் ஓர்இரண்டு=கெண்டைமீன்களாகிய இருகண்கள். வஞ்சம்= பொய் - நிலையற்றது. மெய்= நிலையானது. துஞ்சல்= இறத்தல். அது ஏது= அதுவே காரணமாகும். சொல்கதி= புகழப்பெறும் வீடுபேறு. உஞ்சற்கு= இறப்பு பிறப்பிலிருந்து தப்பிப் பிழைத்தற்கு. உற= திருவடிஅடைய.

**பொழிப்புரை** : கொடிய மனமே! மனத்தை மயக்கும் கெண்டை மீன்களாகிய இருகண்களுடைய மகளிரின் பொய்யான புணர்ச்சியை நிலையானது / மெய்யானது என்றுமயங்கினாய். இறப்பதற்கும், மீண்டும் பிறப்பதற்கும் அதுவே காரணமாகும். புகழப்பெறும் வீடுபேறடைந்து இறப்பு பிறப்பிலிருந்து தப்பிப்பிழைப்பதற்குப் திருப்போரூர் குகனது திருவடிகளில் உன்தலைபொருந்த அவனை வணங்கு.

**விளக்கம்** : இருமனப் பெண்டிரின் ( குறள் 920 ) கலவியாதலின் வஞ்சக்கலவி என்றார்.

( 63 ) கொலைஆதி செய்தவ ராயினும் அன்பு குணம்பொறுமை
இலையாம் உளத்தின ராயினும் போரி இசைந்துகுண
மலைபோல் இருந்த வடிவே லவனைவந்து வாழ்த்தினரேல்
தொலையா மெய்ஞ்ஞானம் அடைவார்முன் மேவும் துயர்இலரே.

**குறிப்புரை** : இலையாம்= இல்லாத. இசைந்து= வந்து. தொலையா= கெடாத. மேவும்= பெற்றிருந்த.

**பொழிப்புரை** : கொலைமுதலியன செய்தவராயினும், அன்பு, நற்குணம், பொறுமை இல்லாத மனத்தினராயினும், திருப்போரூர் வந்து மலைபோல் இருக்கின்ற கூர்மையான வேலேந்தியபெருமான்முன் வந்து வணங்கினராயின் முன்பு பெற்றிருந்த துன்பங்கள் தொலைய, என்றும்கெடாத மெய்ஞ்ஞானம் அடைவர்.

**இலக்கணக்குறிப்பு** : அன்பு குணம் பொறுமை - உம்மைத்தொகைகள். தொலையா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்.

( 64 ) இமையாக் கருங்கண் முலையானை மாதரை எண்ணிஎண்ணிச்
சுமையாகப் பாவம் சுமக்கும்நெஞ் சேஇது துன்புகண்டாய்
சமையாதி ஆறும் உடையோர்க்கு வீடு தரும்பெருமான்
நமைஆட்கொள் போரிக் குமரேசன் சேவடி நா(டு)இன்பமே.

**குறிப்புரை** : இமையா= ஒளிஇல்லாத. கருங்கண்= வஞ்சனையான. யானைமுலை= மிகப்பருத்த முலை. சுமையாக= மிகுதியாக. சமையாதி ஆறு= ஆறுவகைச் சமயங்கள்.

**பொழிப்புரை** : ஒளியில்லாத, வஞ்சனையான பார்வையுடைய, மிகப்பருத்த முலையுடைய பெண்டிரை நினைத்து நினைத்து மிகுதியாகப் பாவத்தைச் சுமக்கின்ற மனமே! உன்செயல் துன்பம்தருவது. ஆறுசமயத்தவர்க்கும் வீடுபேறு தருகின்ற பெருமானும், நம்மை ஆட்கொள்கிறவனும் ஆகிய திருப்போரூர் முருகப்பெருமானின் சேவடிகளை நினை. இன்பமுண்டாகும்.

( 65 ) சடையாம் பவளக் கொடிபடர் பேரின்ப சாகரத்தே
கடையா(து) எழுந்த சுகவார் அமுதினைக் கஞ்சம்ஒன்று
புடைதோன்றும் உந்திப் புணரி மருகனைப் புண்ணியனை
மிடைதீரப் போரியில் கண்டேன் கதிஇன்ப மேவினனே.

**குறிப்புரை** : சடையாம்= செஞ்சடையாகிய. பேரின்ப சாகரம்= பேரின்பம் தரும் கடல். கடையாது= மத்திட்டுக் கடையாமல். வார்= உயர்ந்த. கஞ்சம்= தாமரைமலர். உந்திப்புணரி= தொப்பூழ்கொண்ட திருமால். மிடை= வருத்தம். இன்பகதி= இன்பநிலை - வீடுபேறு.

**பொழிப்புரை** : செஞ்சடையாகிய பவளக்கொடி படர்ந்த பேரின்பம்தரும் கடலாகிய சிவபிரானிடம், அக்கடலினை மத்திட்டுக் கடையாமலேயே தோன்றிய உயர்ந்த சுகம்தரும்

அமுதமாகிய முருகப்பெருமானை; தன்னிடம் தாமரைபொருந்திய தொப்பூழுடைய திருமாலின் மருகனை; புண்ணியனை; என்வருத்தம் தீரத் திருப்போரூரில் கண்டேன்; கண்ட அளவிலேயே வீடுபேறடைந்தேன்.

**இலக்கணக் குறிப்பு** : இச்செய்யுள் உருவகவணி.

( 66 ) மேருப் பொருப்பினைச் சென்றே வியன் அண்டகூடமுட்டும்
சூரப் பொருப்பினைத் தொளைத்தவை வேலவன் துங்கன்எங்கோன்
போரிப் பிரான்எம் பிழைபொறுத் தால்அன்ன பூதலத்தே
யார்இப் படிபொறுப் பார்சொல்க நீஇங்(கு) அறிந்(து)உள்ளமே.

**குறிப்புரை** : வியன்= மிகப்பெரிய. அண்டகூடம்= அண்டத்தின் எல்லை. சூரப்பொருப்பு= தாரகனாகிய மலை. வை= கூர்மை. துங்கன்= மேலானவன். அன்ன= போல. உள்ளமே நீ இங்கு அறிந்து சொல்க.

**பொழிப்புரை** : மாமேருமலையைத் தாண்டி, மிகப்பெரிய அண்டத்தின் எல்லையை முட்டிய மலையாக விளங்கிய தாரகனாகிய அசுரனைத் தொளையிட்ட கூர்மையுடைய வேல் ஏந்தியவனும், யாவர்க்கும் மேலானவனும், எம்அரசனும் ஆகிய போரிப்பெருமான் எனது பிழைகளைப் பொறுத்துக் கொண்டாற்போல இவ்வுலகில் என்பிழைகளை யார்பொறுத்துக்கொள்வார் ? மனமே நீ இதனை அறிந்து சொல். யாரும் என்பிழையை அவன்போல் பொறுக்கமாட்டார்.

( 67 ) அண்டப் பரப்பினைக் கண்(டு)ஓர் நொடிவரும் ஆய்ந்தபச்சைக்
கொண்டல் சிறைப்பெரு மாமயி லோன்குகன் எங்கள்ஐயன்
தண்டைத் திருப்பதம் போரூரில் வானவர் தம்முடிமேல்
தொண்டுற்ற பேர்முடி மேல்மறை மேல்என்றும் தோன்றிடுமே.

**குறிப்புரை** : ஆய்ந்த= சிறந்த. பச்சைக் கொண்டல்= வளமான மேகம். சிறை= சிறகு. தொண்டுற்றபேர்= தொண்டர்.

**பொழிப்புரை** : அண்டப்பெருவெளியைக் கண்டு ஒருநொடியில் வலம்வரும் சிறந்த வளமான மேகம் ஒத்த சிறகுடையை அழகிய மயில்மேல்வரும் போரூர்முருகனாம் எமது தலைவனின் தண்டையணிந்த திருவடிகள் தேவர்களின்தலையிலும், தொண்டர்தலையிலும் மறைகளின் மேலும் தோன்றும்.

( 68 ) தரைபகச் சீத்துத் திசைஅதி ரச்சிறை தான்புடைத்தே
எரிநிறச் சென்னி நிமிர்த்து வளைத்(து)எண் புலிநகவாய்
விரை(உ)உறத் தோன்றத் திறந்(து)ஊழி மேகம் எனத்தொனிக்கும்
பொருகொடிச் சேவலன் போரூரன் ஆரினும் புண்ணியனே.

**குறிப்புரை** : தரைபகச்சீத்து= தரைமண் கூறுபட அகற்றி. சிறை= சிறகு. புடைத்து= அடித்துக்கொண்டு. எண்= வலிமையான. வாய்= வாயின் அலகு. தொனிக்கும்= கூவும். பொருகொடி= போர்க்கொடி. சேவலன்= சேவலுடையவன் - முருகப்பிரான். ஆரினும்= யாரையும்காட்டிலும்.

**பொழிப்புரை** : தரைமண்கூறுபட அகற்றி, எட்டுத்திசைகளும் அதிருமாறு சிறகடித்துக்கொண்டு, தீப்போன்ற செந்நிறத்தலையை நிமிர்த்தி வளைத்து, வலிமையான புலியின் கூரிய நகத்தைப்போன்ற கால்நகத்தை வெளியே நீட்டி, வாயினை விரைவாகத் திறந்து ஊழிக்காலத்து மேகம்போல் முழங்கும் சேவலுடைய கொடிஏந்திய திருப்போரூர் முருகப்பிரான்அருள்வதில் பிறர்யாரையும்விடப் புண்ணியன் ஆவான்.

( 69 ) நதிபிறை கொன்றை செறிசென்னி மூன்றுகண் நான்குபுயம்
துதிஇரு தாள்நிகழ் மாணிக்க வெற்பைத் தொடர்ந்துபடர்
கதிதரு பச்சைக் கொடிதோன்றும் இன்பக் கனிஅளகை
அதிவளம் மேவிய போரூரில் வந்(து)எமை ஆட்கொண்டதே.

**குறிப்புரை** : செறி= செறிந்த - கூடிய. துதி= வணங்கக்கூடிய. மாணிக்கவெற்பு= மாணிக்க மலையாகிய சிவபிரான். தொடர்ந்து= விடாது பற்றிக்கொண்டு. பச்சைக்கொடி= மரகதக்கொடியாகிய மயில். இன்பக்கனி= பேரினம்தரும் கனியாகிய முருகப்பிரான். அளகை அதிவளம்= குபேரனது அளகாபுரியைவிட மிக்கவளம்.

**பொழிப்புரை** : கங்கை, பிறைநிலா, கொன்றைமலர் கூடிய தலையும்; மூன்றுகண்களும், நான்கு தோள்களும், அனைவரும் வணங்கும் இருதிருவடிகளும் விளங்கும் மாணிக்கமலையாகிய சிவபிரானைத் தொடர்ந்து மரகதக்கொடியாகிய மயில்மேல்அமர்ந்து, வீடுபேறுவழங்கும் இன்பக்கனியாகிய முருகப்பெருமான் ஆகிய தெய்வம், குபேரனது அளகாபுரியைவிட மிக்கவளம் பொருந்தியபோரூரில் தோன்றி எம்மை ஆட்கொண்டது.

**இலக்கணக்குறிப்பு** : முதல் ஈரடிகளில் எண்ணலங்காரம் காண்க.

( 70 ) நன்மை நினைத்(து)உன் திருவடி சேர நயக்கும்என்னைப்
புன்மை நினைத்(து)உளம் கொண்(டு)ஏக நொந்தனன் பொய்ம்மையினேன்
மும்மை அளிக்குறும் இன்பம்நம் போரி முருகப்பிரான்
செம்மை அளிக்கும் நினைவினை வேண்டும் சிறியனுக்கே

**குறிப்புரை** : நயக்கும்= விரும்பும். உளம் புன்மை நினைத்து. மும்மை அளிக்குறும்= இம்மைஅம்மை உம்மை ( இப்பிறப்பு, வருபிறப்புகள், வீட்டு வாழ்வு ) ஆகிய மூன்றிலும். வேண்டும்= வேண்டுகிறேன்.

. **பொழிப்புரை** : நன்மைகளை நினைத்து உனது திருவடியடைய நினைக்கும் என்னை, பொய்யான என்னுள்ளம் கீழானவற்றை நினைத்துத் தன்வழியே அழைத்துக்கொண்டு செல்வதால் வருந்துகிறேன். இம்மை, மறுமை, உம்மை மூன்றிலும் இன்பம்தரும்

நம்திருப்போரூர் முருகப்பிரான், என்வாழ்வில் செம்மைநலமே தரும் நினைவுகளை அற்பமான எனக்கு அருளவேண்டுகிறேன்.

( 71 ) அவுணக் கருங்கடல் செங்கடல் ஆக்கும் அணிநெடுவேல்
சிவணுற்ற தோள்கிரிச் சேவகன் தன்னைச் செழுங்கொடிக்கான்(கு)
அவணுற்ற கைக்குற மானைத் திருடிய கள்வன்தன்னைக்
குவ(டு)உற்ற சாரல்அம் போரியி லேகண்டு கொண்டனனே

**குறிப்புரை** : செங்கடல் ஆக்கல்= குருதிக்கடலாக்கல். சிவணுற்ற= பொருந்திய. செழுங்கொடிக்கான் = வளமான கொடிகளுடைய காடு. அவணுற்ற= அங்குவந்த. கைக்குறமான் = கைகளுடைய குறத்தியாகிய மான் - வள்ளி. குவடு உற்றசாரல்= மலைச்சரிவு.

**பொழிப்புரை** : கருநிறமுடைய அசுரர்களாகிய கடலினைக் குருதிக்கடல் ஆக்கும் அழகிய நீண்டவேல்தாங்கிய தோள்களுடைய மலைவீரனை - முருகப்பிரானை, வளமான கொடிகள் படர்ந்த காட்டுக்கு வந்த வள்ளிநாச்சியாரை அங்குத் திருடிய கள்வனாகிய முருகப்பிரானை, மலைச்சாரலுடைய அழகிய திருப்போரூரில் கண்டுகொண்டேன்.

**இலக்கணக்குறிப்பு** : அவுணக்கருங்கடல் செங்கடலாக்கும் - ஏகதேசஉருவகம்.

( 72 ) சோலைக் கருங்குயி லேமயி லேஎன்று கொஞ்சுமலை
வாலைப் பருவமின் தந்தருள் ஆனந்த மாமுகிலைச்
சோலைப் புயல்மலர்த் தேன்பொழி போரிச் சுராதிபனை
மாலைக் கடந்த மனத்தில் கண்டார்க்(கு)உண்டு வாழ்வுகளே.

**குறிப்புரை** : மலை வாலைப் பருவமின்= மலைக்கண் தோன்றிய வாலைப்பருவ மின்னலாகிய பார்வதிதேவி. ( வாலைப்பருவம்= பருவமடையாத பன்னிருவயது ) ஆனந்த மாமுகில்= பேரின்ப வடிவான பெருமேகம் - முருகப்பிரான். சோலைமலர்பொழி தேன்புயல்= சோலைமலர்கள் பொழியும் தேன்மழை.- முருகப்பிரான். மால்= மனமயக்கம்.

**பொழிப்புரை** : சோலையில் தோன்றிய கரிய குயிலே என்றும், மயிலே என்றும் தந்தையாகிய இமவானால் கொஞ்சப்பெற்ற பார்வதிதேவி தந்த பேரின்பவடிவான செம்மேகம் ஆகிய முருகப்பெருமானை, சோலைமலர்கள் பொழியும் தேன்மழையாகிய முருகப்பிரானை, திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவர்தலைவனாகிய முருகப்பிரானை, மனமயக்கமின்றிக் கண்டவர்க்கு நல்வாழ்வுகள் உண்டு.

( 73 ) நீரில் கயல்எனக் கண்ணீர் துலங்கிநெஞ் சைக்கவற்று
நாரிச் சமனையும் நம்புவரோநல னேகொடுக்கும்
போரிப் பதிஎம் குமரேசன் தாட்(கு)அன்பு பூண்டுநித்தம்
சீரிற் பெரிய கதிமேவி இன்பம் செறிபவரே.

**குறிப்புரை** : என= போல. துலங்கி= ஒளிவீசி. கவற்று= கவலைப்படச்செய்யும். நாரி= மகளிர். சமன்= நடுவிடம் - அல்குல்.

**பொழிப்புரை** : திருப்போரூரில் எழுந்தருளியுள்ள எப்போதும் நன்மைதரும் எமது முருகப்பிரானின் திருவடிகட்கு அன்பினை மேற்கொண்டு, அதனால் நாடோறும் மிகப்பெரும் சிறப்புடைய உயர்நிலை இன்பத்தில் திளைப்பவர்; நீரில் கெண்டைமீன் போல் கண்ணீரில் ஒளிவீசிப் பிறர்நெஞ்சைக் காமக்கவலை கொள்ளச்செய்யும் பெண்களின் அல்குலை நம்பமாட்டார்.

**இலக்கணக்குறிப்பு** : நம்புவரோ - ஓகாரம் எதிர்மறைப்பொருளது. இச்செய்யுள் உவமையணி.

( 74 )

சூரன் கிளைகளைந்(து) எண்ணிலி தேவர் துயர்களைந்து
வீரம் செறிந்த நவவீரர் முன்னவன் வேலையில்மேய்ந்(து)
ஆரம் புயல்துயில் போரூர் முருகன் அருள்எனக்குச்
சீரும் குணமும் மருவும் தவமும்நற் செல்வமுமே.

**குறிப்புரை** : கிளைகளைந்து= கிளைஞராகிய அசுரர்களை மாய்த்து. களைந்து= போக்கி. நவவீரர்= வீரவாகுத்தேவர் முதலிய ஒன்பதின்மர் முன்னவன்= மூத்தவன் - முருகப்பிரான். வேலையில் மேய்ந்து= கடலில் நீர்பருகி ஆரம்= சந்தனமரம். மருவும்= இவற்றால் பொருந்தும்.

**பொழிப்புரை** : சூரபன்மனையும் அவனது கிளைஞராகிய அசுரர்களையும் மாய்த்து, தேவர்களின் துயரம்போக்கிய, முருகனின் படைத்தலைவர்களாகிய வீரம்மிக்க வீரவாகுத்தேவர் முதலிய ஒன்பதின்மர்க்கு அண்ணனும், கடல்நீர்பருகிச் சந்தனமரத்தில் உறங்கும் மேகமுடைய திருப்போரூரில் எழுந்தருளியுள்ளவனும் ஆகிய முருகனருள் எனக்குச் சிறப்பும் நற்குணமும் இவற்றால் பொருந்திய தவமும் செல்வமும் தரும்.

( 75 )

இருகோட்(டு) ஒருமதி சூடும் பிரான்மகிழ்ந்(து) இன்புறவே
திரு(கு)ஓட்டு போதம் உரைசெய்த தேசிகன் செங்குழையால்
குரு(கு)ஓட்டி மாதர் விளையாடும் போரிகை கூப்பினரைப்
பொருகோட்(டு) எருமையன் கண்டாலும் அஞ்சிப் புறஞ்செலுமே.

**குறிப்புரை** : இருகூட்டு= இரண்டு நுனி. மதி= பிறை. திருகு ஓட்டு= மனக்கோட்டம் தீர்க்கும். தேசிகன்= முருகப்பிரான். செங்குழை= சிறந்த பொற்குழை. குருகு= பறவை. கோட்டுப்பொரு= கொம்பினால் போரிடும். எருமையன்= எருமையில் வரும் எமன். புறஞ்செலும்= ஓடிவிடுவான்.

**பொழிப்புரை** : இரண்டு நுனிகளுடைய ஒருபிறை சூடிய சிவபிரான் மகிழ்ந்து இன்புற, மனக்கோட்டம் தீர்க்கும் ஞானத்தை - ஓங்காரப்பொருளை - ஓதிய ஞானியாகிய முருகப்பிரான் எழுந்தருளிய இடமாக விளங்குவதும், தமது சிறந்த பொற்குழைஎறிந்து பறவைகளை மகளிர் ஓட்டுமிடமாக விளங்குவதும் ஆகிய திருப்போரூர் முருகப்பிரானைக் கைகூப்பி

வணங்குகிறவர்களைக் கண்ட அளவிலேயே; கொம்புகளால் போரிடும் எருமையில் வரும்எமன் அஞ்சி ஓடுவான்.

**விளக்கம்** : பண்டையர் செல்வச்சிறப்பினை, " குழைகொண்டு கோழிஎறியும் வாழ்க்கை " என்ற சங்கத்தொடர் புலப்படுத்தும்.

**( 76 )**

ஆரணன் நாரணன் இன்னமும் காண்டற்(கு) அரியபரி
பூரணம் தோற்றிய பூரண னேதிருப் போரியில்வாழ்
காரண னேஒரு நாள்நீ அளித்த கரையில்சுக
பாரணம் என்(று)அருள் வாய்கடை யேற்(கு)எம் பரம்பொருளே.

**குறிப்புரை** : பரிபூரணம்= ஞானநிறைவுப்பொருள் - சிவபிரான். காரணன்= கடவுள். பாரணம்= அனுபவம்.

**பொழிப்புரை** : நான்முகன், திருமால் ஆகியோராலும் இன்னமும் காண்பதற்கு அரிய ஞானநிறைவுப் பொருள் - சிவபிரான் தோற்றுவித்த ஞானநிறைவுபொருளே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள கடவுளே! நீ முன்னொருநாள் கடைப்பட்டவனாகிய எனக்கும்அளித்த சுகானுபவத்தை இனிஎன்று அருள்வாய். இப்போதே அருள்.

**( 77 )**

மெய்வேடம் பூண்டவர்க்(கு) உள்ளும் புறனும் விளங்கும்பிரான்
பொய்வேடம் பூண்டனன் என்றாலும் காத்தனை பூங்கணையால்
எய்வேள்த னால்வருந் தா(து)எனை ஆள்இனி ஏய்ந்ததினை
கொய்வேட மானை மணந்தோய்தென் போரியில் குணக்கொண்டலே.

**குறிப்புரை** : பிரான்= பெருமானே, வேள்= மன்மதன். ஏய்ந்த= முற்றிய. வேடமான்= வேடர்குல வள்ளி. கொண்டல்= மேகம்.

**பொழிப்புரை** : மெய்யான தவத்தோரின் மனத்திலும் வெளியிலும் விளங்கும்பெருமானே! முற்றிய தினை கொய்யும் குறவர்குல மானாகிய வள்ளியை மணந்தவனே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள குணமேவடிவான மேகமே! நான் பொய்யான தவவேடம் பூண்டிருந்தாலும் மென்மையான மலர்அம்புகளை எய்யும் மன்மதனால் - காமத்தால் வருந்தாமல் என்னை ஆட்கொண்டருள்க.

**( 78 )**

அருண கிரிப்பெயர் மெய்ஞ்ஞான நாதன்சொல் லால்வனைந்த
பொருனை நதிக்கிரி யான்புகழ் மாலை புனைபுயனே
கருணை மிகுத்(து)எனை ஆண்டாய்க்கும் ஈண்டுகைம் மா(று)உளதோ
தருண வளத்தின னேசம ராபுரிச் சண்முகனே..

**குறிப்புரை** : பொருனைநதிக்கரையான்= குமரகுருபர அடிகள். தருணவளம்= மோட்சம்.

**பொழிப்புரை** : மோட்சமாகிய வளத்திற்குரியவனே! திருப்போரூர் ஆறுமுகனே! புகழ்வாய்ந்த அருணகிரியார் ஆகிய மெய்ஞானி, தாமிரவருணி நதிக்கரை ஸ்ரீவைகுண்டத்துக் குமரகுருபர அடிகள் ஆகியோர் தமது சொல்லால்கட்டிய புகழ்மாலை தரித்த திருத்தோளனே! மிக்ககருணையுடன் என்னை ஆட்கொண்ட உனக்குக் கைம்மாறு ஏதுமில்லை.

( 79 ) மாலோன் விருந்தையை உண்டாக்கிக் கொண்டிலன் மாமலரோன்
மேலான நாற்சிரம் ஒன்றாக்கிக் கொண்டிலன் மீ(து)உயர்ந்த
நாலாம் மறைபுகழ் போரூரன் சம்பந்த நாமம்கொண்டே
நூலாம் இடைமயில் ஆக்கினன் என்பை நொடியினிலே.

**குறிப்புரை** : விருந்தை= துளசி. மாமலரோன்= தாமரையில் வாழும் நான்முகன். சம்பந்தநாமம்= திருஞானசம்பந்தர் என்ற பெயருடன். நூலாம் இடை மயில்= நூல்போன்ற இடையுடைய மயிலாகிய பூம்பாவை. என்பை= எலும்பை

**பொழிப்புரை** : திருமால் தனக்குரிய துளசியைத் தானே உண்டாக்கிக்கொள்ள வில்லை; தாமரையில்வாழும் நான்முகன் தனது நான்கு தலைகளையும் ஒரேதலை ஆக்கிக்கொள்ளவில்லை; ஆனால் மிகவுயர்ந்த நான்மறை புகழும் போரூர்ப்பெருமான் திருஞானசம்பந்தர் என்றபெயருடன் வந்து, எலும்புகளை நூல்போன்ற இடுப்புடைய பூம்பாவை ஆக்கினான். திருப்போரூரான் ஆற்றல் ஒப்பற்றது.

**விளக்கம்** : திருமாலும் நான்முகனும் தமக்குரியதை ஆக்கிக்கொள்ளவோ மாற்றிக்கொள்ளவோ இயலாதவர்கள். ஆனால் போரூர் முருகைபிரான்,பிறர் முற்றாக இழந்தஒன்றை முன்புபோல் ஆக்கவல்லவன் என்றார்.

திருஞான சம்பந்தர், மிகப்பெரிய அருளாளர்களுள் ஒருவரேதவிர முருகப்பிரான் அல்லர் என்ற கருத்தைச் செய்யுள் 56 இன் விளக்கவுரையில் காண்க.

( 80 ) சகல மதங்களை எல்லாம் உணர்ந்த தவமுனிவோர்
புகலும் இலக்கம்எண் ணாயிரம் பேரைப் பொருகழுவில்
இகலற வைத்தும் வரும்ஏதம் ஒன்(று) இன்றி யேஇருந்தான்
திகழுறும் போரியின் சம்பந்த நாமம் சிறந்துகொண்டே.

**குறிப்புரை** : புகலும்= சொல்லும். எண்ணாயிரம் சமணரை, பொருகழு= கூரிய கழுவில். இகல் அற= பகையுணர்ச்சி இல்லாமல். ஏதம்= குற்றம். சிறந்துகொண்டே= சிறந்து விளங்குமாறு செய்துகொண்டு.

**பொழிப்புரை** : அனைத்து மதங்களையும் உணர்ந்த தவத்தில் சிறந்த முனிவர்கள், எண்ணாயிரமாகச் சொல்லபெறும் சமணமுனிவர்களைப் பகைஉணர்வு இல்லாமல் கூர்மையான கழுவில் ஏறச்செய்தும் அதனால்வரும் பாவஅனுபவம் ஒன்றுமில்லாமல் ஞானசம்பந்தன் என்ற சிறந்த பெயருடன் போரூரில் முருகனாக விளங்குகிறான்.

**விளக்கம்** : திருஞானசம்பந்தர், முருகப்பிரான் அல்லர் என்பதைச் செய்யுள் 56 இன் விளக்கத்தில் கண்டுகொள்க.

( 81 ) எண்ணற்(கு) அரிய சமணக் களைகளைந்(து) ஏதம்இலாத்
தண்ணுற்ற பேரருள் நீர்பாய்ச்சிச் சைவப் பயிர்வளர்த்து
நண்ணச் சிவானந்த போகம் விளைவிக்கும் நல்உழவன்
விண்ணுற்ற தேவரும் சூழ்போரி வாழ்கின்ற வேலவனே.

**குறிப்புரை** : எண்ணற்கு அரிய= அளவிடவியலாத. களைந்து= நீக்கி. நண்ண= பொருந்த

**பொழிப்புரை** : அளவிடவியலாத சமணர் ஆகிய களைகளை நீக்கிக், குற்றமில்லாத குளிர்ந்த அருளாகிய நீர்பாய்ச்சிச், சைவமாகிய பயிர்வளர்த்து, அதன்மூலம் சிவானந்தம் ஆகிய இன்பத்தைப் பொருந்த விளைவிக்கும் உழவன்; வானுலகத் தேவர்களும் சூழ்ந்துவணங்கும் திருப்போரூர் முருகப்பிரானாவான்.

**விளக்கம்** : திருஞானசம்பந்தர் முருகப்பிரானல்லர் என்பதைச் செய்யுள் 56 இன் விளக்கத்தில் காண்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முற்றுருவகவணி.

( 82 ) தாருகன் கோளரி மாமுகன் கொக்கின் தனதுபெயர்க்
கார்உரு மால்வரை சூதம்வெஞ் சூர்அகம் காய்ந்தவைவேல்
பேருறு வோர்தமைக் காலனும் தீண்டப் பெறான்எனிலே
போரிஎன் நாயகன் தாட்கே சரணம் புகுநெஞ்சமே.

**குறிப்புரை** : கோள் அரிமாமுகன்= வலிமையான சிங்கமுகன். கொக்கின் தனது பெயர்= மாமரத்தின் உருவம். கார் உரு மால்வரை சூதம்= கருமையான பெரியமலைபோன்ற மாமரம். வெஞ்சூர் அகம்= கொடிய அசுரனான் சூரபத்மனின் ஆணவம். காய்ந்த= வற்றச்செய்த. வை= கூரிய. தாட்கே= திருவடிகளிலேயே.

**பொழிப்புரை** : அசுரர்களாகியதாருகன், வலிமையான சிங்கமுகன். மாமரத்தின் உருவுடன் கரியபெரிய மலைபோன்று மாமரமாக நின்ற சூரபத்மன் ஆகியோரின் ஆணவத்தை வற்றச்செய்த கூர்மையான வேலின் புகழச்சரணடைந்தவர்களை எமனும் தொடமாட்டான் என்றால் நெஞ்சே! திருப்போரூரில் எழுந்தருளிய என்தலைவனாகிய முருகப்பிரானின் திருவடிகளில் அடைக்கலம் புகுவாயாக.

( 83 ) ஆருயிர் யாவைக்கும் ஆனந்தத் தேனை அளிக்குமுக்கண்
தாருவி னால்கவி மாமழை யேபொழி தண்முகிலே
காரிருள் மாமலம் தீர்த்(து)எனை ஆளக் கடன்உனக்கே
சீருறு தேசிக னேபோரி மாநகர்ச் சிற்பரனே.

**குறிப்புரை** : முக்கண் தாருவினால்= சிவபிரான் ஆகிய தேவதாருவுக்கு. மாகவி= சிறந்த ஞானம். காரிருள் மாமலம்= கரிய இருள்வடிவான ஆணவமலம். கடன்= கடமை. தேசிகனே= ஒளிவடிவனே.. சித்பரன்= ஞானமயமான மேலானவன்.

**பொழிப்புரை** : சிறப்புப் பொருந்திய ஒளிவடிவனே! போரூரில் எழுந்தருளியுள்ள ஞானமயமான மேலானவனே! சிறந்தஉயிர் அனைத்துக்கும் பேரின்பத்தேனளிக்கும் சிவபிரானுக்குச் சிறந்தஞானம்ஆகிய மழையே பொழியும் குளிர்ச்சியுடைய மேகமே! என்னிடத்துள்ள கரியஇருள்வடிவமான பெரியஆணவ மலத்தின் தீயஆற்றலைத் தீர்த்து என்னை ஆளவேண்டுவது உன்கடமையாகும்.

**விளக்கம்** : ஆணவமலம், ஆன்மாவின் பிறவிக்குமுன் அதன் அறிவை மறைத்தும், உயிர் பிறந்தபின் கீழானவற்றில் செலுத்தியும் ( ஆவாரகம், அதோநியாமிகம் ) துன்புறுத்துவது. இவ்வாணவம் முற்றாக ஒழிக்கவியலாதது என்பதும், இதன் தீயஆற்றல்களை மட்டுமே ஒழிக்கவியலும் என்பதும், அவ்வாற்றல்கள் ஒழிந்த நிலையில்இது ஆன்மாவுக்கு இறைவன்தரும் இன்பத்தை மிகுவித்துக் கொண்டிருக்கும் என்பதும் மெய்கண்ட நூல்களின் முடிபு. இதனை;

" முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்
சுத்தஅநு போகத்தைத் துய்த்தல்அணு - மெத்தவே
இன்பம் கொடுத்தல்இறை இத்தைவிளை வித்தல்மலம்
அன்புடனே கண்டுகொள்அப் பா " ( உண்மை விளக்கம். 50 )

என்பது உணர்த்தும்.

( 84 ) வீரத்(து) அவுணர் உயிர்களை மேய்ந்து விரைவின்அவர்
சோரிக் கடலிடை ஆடிக் குடர்த்தொங்கல் சூடிவெற்றிக்
கூர்உற்ற வேலின் கரம்கொண்டோன் தென்போரிக் குமரன்என்மேல்
சீருற்ற பேரருள் வைத்தான் இஃ(து)என் தெளிந்திலனே.

**குறிப்புரை** : மேய்ந்து= உண்டு. சோரி= இரத்தம். தொங்கல்= மாலை. என்= என்னகாரணம்.

**பொழிப்புரை** : வீரமுடைய அசுரர்களின் உயிர்களை விரைந்து உண்டு, அவர்களின் குருதிக்கடலில் நீராடி, அவ்வசுரர்களின் குடல்களாகிய மாலைகள் தரித்து, கூரிய வேலினைக் கையில் ஏந்திய முருகப்பிரான், எனக்குக் சிறப்புப் பொருந்திய தனது பெரியஅருளைத்தந்தான்.. இதற்கு என்ன காரணம் என்று எனக்குத்தெரியவில்லை.

**இலக்கணக்குறிப்பு** : தொங்கல் - தொழிலாகுபெயர். இச்செய்யுள் முற்றுஉருவகவணி.

( 85 ) தேவரும் நாகரும் யாவரும் மும்முறை தெண்டனிட
மேவரும் மாமகு டத்தின் இராசிகள் மீ(து)ஒளிரும்
தூவரு மாமணி ராசிகள் மேவித் தொடச்சிவந்த
பூவரு தாளினன் போரூர்க் குகன்எனும் புங்கவனே,

**குறிப்புரை** : தெண்டனிட= தரைபட விழுந்து வணங்க. மேவரும்= தரித்த. இராசி= கூட்டம். தூ= தூய்மை. பூவரு= பூப்போன்ற. புங்கவன்= கடவுள்.

**பொழிப்புரை** : தேவர்கள் நாகர்கள் மற்றுமுள அனைவரும் மூன்றுமுறை தரைபடக் காலில் விழுந்து வணங்க, தரித்த அவர்களின் அழகியமுடிகளில் பதித்த மணிக் கூட்டத்தின்மேல் ஒளிபொருந்திய தூய சிறந்த மணிக்கூட்டத்தின் ஒளிபடச் சிவந்த மலர்போன்ற திருவடியுடையவன் போரூர் முருகப்பிரான் ஆகிய கடவுளாவான்.

**விளக்கம்** : இடையீடின்றித்தொடர்ந்து தாளில்பட வணங்குகிறவர்களின் திருமுடிகள் தொடுவதால் போரூர் முருகப்பிரானின் மலர்போன்ற திருவடிகள் சிவந்தன.

( 86 ) கொக்கரித் தேவரும் தானவர் சேனையைக் கொன்(று)உழக்கி
மிக்கரத் தக்கடல் ஆடிப் பிணமலை மீ(து)இவர்ந்து
செக்கரில் தோன்றும் கணநாதர் சேவிக்கும் சேவடியான்
இக்(கு)அரிக் கும்சுரும்(பு) ஆர்க்கின்ற போரிக்(கு) இறையவனே.

**குறிப்புரை** : கொக்கரித்து= ஆரவாரித்து. தானவர்= அசுரர். உழக்கி= அழித்து. ஆடி= நீராடி. இவர்ந்து = ஏறி. செக்கர்= செவ்வான். கணநாதர்= பூதகணத்தார். இக்கு அரிக்கும்= கரும்பை அரிக்கும்.

**பொழிப்புரை** : கரும்பினை அரிக்கும் வண்டுகள் முழங்கும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகப்பிரான்; ஆரவாரித்துவரும் அசுரர்படையைக் கொன்றுஅழித்து, மிகுதியான குருதிக்கடலில் நீராடி, அசுரர்களின் பிணமாகிய மலைமேல் ஏறிவந்து இரத்தக்கறையால் செம்மேகம்போல் தோன்றும் பூதகணத்தார் வணங்கும் சிவந்த திருவடிகளுடையவன்

( 87 ) மணிகொண்ட சேடன் படமுடி தூக்கி மணிஉதறித்
திணிகொண்ட மால்வரை மாடே பறந்(து)உறச் சேண்பறந்(து)அங்(கு)
அணிகொண்ட தேவர் தொழச்சென்று மீண்(டு)இங்(கு) அவவுமும்மைக்
குணில்கொண்ட பேரிகை ஆர்க்கின்ற போரிக் குகன்மயிலே.

**கூட்டுமுறை** : மணிகொண்ட .............பறந்துஉற, குணில் கொண்ட மும்மைப் பேரிகை போரிக்குகன் மயில், அணிகொண்ட தேவர்தொழ அங்குச் சேண்பறந்து சென்று மீண்டு இங்கு அவவும்.

**குறிப்புரை** : மணி= இரத்தினம். சேடன் ஆதிசேடன். மாடே= பக்கம். பறந்து உற= விரைந்து செல்ல. சேண்= நெடுந்தொலைவு. அணி= கூட்டம். அவவும்= விரும்பும். மும்மை= மூன்று. குணில்= முரசுமுழக்கும் சிறுதடி.

**பொழிப்புரை** : இரத்தினத்தைத் தலையில் கொண்ட ஆதிசேடன் தனதுபடமுடைய தலையைத் தூக்கி, இரத்தினத்தை உதறிவிட்டுப் பெரியமலைப்பக்கம் விரைந்து செல்ல,

அதுகண்ட மணமுரசு, கொடைமுரசு, வீரமுரசு / படைமுரசு ஆகிய மூவகை முரசுகளும் முழங்குகிற திருப்போரூர் முருகனுடைய மயில், கூடிநின்ற தேவர்கள்தொழ நெடுந்தொலைவு அங்குப்பறந்துபோய் ஆதிசேடனத் துரத்திவிட்டு மீண்டும் போரூர்வரவிரும்பிச் செல்லும்.

( 88 ) வாரி சுழல வடவரை ஆதி வரைசுழலக்
காரொடு சந்திர சூரியர் மீன்கறங் காச்சுழல
கூர்இருள் யாக்கை அரக்கர் சுழன்றிடக் கோதில்பச்சைத்
தேரென வட்டம் வரும்போரி வேலன் சிறைமயிலே.

**குறிப்புரை** : வாரி - கடல். சுழல= மனம் கலங்க. வடவரை= மேருமலை. கறங்கா= குரல்எழுப்பி. கூர்= மிக்க. வட்டம் = வளையவரும். சிறை= சிறகு.

**பொழிப்புரை** : கடல், மேருமலை, முதலியன வருந்த, மற்றும்மேகம், சந்திரன், சூரியன் விண்மீன்கள் ஆகியன கூக்குரல் எழுப்பி மனம்வருந்த, மிக்க இருள்போன்ற கரிய உடம்புடைய அரக்கர் மனம்கலங்கப் பசிய தேர்போலப் போரூர் முருகப்பிரானுக்கு ஊர்தியாக வலம்வரும் மயிலே வாழ்க.

**விளக்கம்** : முருகனது ஊர்திமயிலும், கொடிச்சேவலும் சூரபன்மனது மறுவடிவமாதலின் அவன்போல் அவையும் பேறாற்றல் உடையன என்ற கவிஞர்களின் மரபுபற்றி இங்கு மயிலின் ஆற்றல் கூறினார்.

( 89 ) மின்னல் சுடர்விழு தோட்டு மணிக்குழை மெல்லியலார்
பொன்உற்ற பூண்முலை வேட்டநெஞ் சேஇது பொய்ம்மயக்கே
தன்னை தலைவனை ஆராய்ந்(து) அடையும் தகைமையின்புக்(கு)
என்அப்பன் ஆகிய போரூர்ச்செவ் வேளை இறைஞ்சுவையே.

**குறிப்புரை** : மின்னல் சுடர்= மின்னல் ஒளி. மணிக்குழை= மணிகள் பதித்த காதணி. பொன்உற்றபூண்.= பொன்னாலான அணிகலன். வேட்ட= விரும்பிய. தகைமை= தகுதி. இறைஞ்சுவை= வணங்குக.

**பொழிப்புரை** : மின்னலின்ஒளி வீசும்மேலான காதணியாகிய நவமணிகள் பதித்த குழையணிந்த பெண்களின், பொன்னாலான அணிகலன் அணிந்த முலைகளை விரும்புகிற மனமே! உன்விருப்பம் பொய்யான மயக்கத்தில் தோன்றியதாகும். அற்பமான உன்னையும், மிகமிக உயர்ந்த உன்தலைவனையும் ஆராய்ந்து அவனை அடையும்தகுதியின் முயன்று என்அப்பனாகிய போரூர் முருகப்பிரானை வணங்கி ஈடேறுக.

( 90 ) முக(டு)இடித் துச்சக்கர வாளத்தை முட்டிவெம் மூரிளட்டுப்
பகடுகுத் திக்கனல் சிந்திடப் பார்த்துப் பரவைஎல்லாம்
அக(டு)உறத் தேக்கி விடுத்(து)உறத் தாவி அரைக்கணம்போய்க்
ககனம்முற் றும்வரும் போரூரன் ஏறும் கனதகரே.

**குறிப்புரை** : முகடு= அண்டத்தின் எல்லை. மூரி= வலிமை. எட்டுப் பகடு= எண்திசை யானை. பரவை= கடல். அகடு= வயிறு. உறத்தாவி= மிகவும் தாவி. அரைக்கணம்போய்= அரை நொடியில். ககனம்= வான்வெளி. வரும்= சுற்றிவரும். கனதகர்= வலிமையுடைய ஆட்டுக்கிடா.

**பொழிப்புரை** : அண்டத்தின் எல்லையை இடித்து, அண்டத்தைச் சுற்றியுள்ள சக்கரவாளம் என்றமலையை முட்டி, எட்டுத்திசைகளிலும் இருந்துகொண்டு உலகைத்தாங்கும் எண்திசை யானைகளையும் குத்தி, நெருப்புச்சிந்தப்பார்த்துக் கடல் முழுவதையும் தேக்கியும் விடுவித்தும், மிகத்தாவி அரைநொடியில் ஆகாயம் முழுவதையும் வலம்வரும் வலிமையான ஆட்டுக்கிடாவே போரூர் முருகப்பிரான் ஏறும் ஆட்டுக்கிடாவாகும்.

**விளக்கம்** : நாரதமுனிவர் செய்த வேள்வியில் தோன்றிய ஆட்டுக்கிடாயை வீரவாகுத்தேவர் கொண்டுவந்து தர, முருகப்பிரான் அதன்மேல் ஏறிச்செலுத்தினார். அந்த ஆட்டுக்கிடாயின் பேராற்றலைக் கூறுமுகத்தான் அதை அடக்கிஏறிச் செலுத்திய பெருமானின் அளவிடற்கரிய ஆற்றலை உணர்த்தினார், இக்கந்தபுராணச் செய்தியைக் கந்தர் கலிவெண்பா;

" நெருப்பில் உதித்து
அங்கண் புவனம் அனைத்தும் அழித்து உலவும்
செங்கண் கிடாயதனைச் சென்றுகொணர்ந்(து) எம்கோன்
விடுக்குதிஎன்(று) உரைப்ப அதன்மீ(து) இவர்ந்(து)எண்திக்கும்
நடத்தி விளையாடும் நாதா " ( 88 - 90 )

என்று குறிப்பிடும்.

( 91 ) மகுடங்கள் ஆறும், குழைஓர் பனிரண்டும் வானவரும்
புகழும் கடகங்கள் ஈராறும் ஆழியும் பூனதப்பொன்
திகழும் மதாணியும் செந்துகிர் ஆடையும் செஞ்சிலம்பும்
நிகழும் படிதரித்(து) ஓர்தெய்வம் போரி நிலாவியதே.

**குறிப்புரை** : ஆழி= மோதிரம். பூனதப்பொன்= பொன்வகையில்சிறந்த சாம்பூனதப்பொன். மதாணி= மார்பணியாகிய பதக்கம். நிகழும்படி= பொருந்த. நிலாவியது= விளங்குகிறது.

**பொழிப்புரை** : ஆறு திருமுடிகள், பன்னிரண்டு குழைகள், தேவர்கள் புகழும் பன்னிரண்டு கடகங்கள், மோதிரங்கள், சாம்பூனதப்பொன்னால் ஆன பதக்கம், செம்பவளம்போல் செவ்வாடை, சிறந்த சிலம்பு ஆகியவற்றைப் பொருந்த அணிந்து போரூரில் ஒப்பற்ற தெய்வமாகிய முருகப்பெருமான் எழுந்தருளியுள்ளான்

**விளக்கம்** : திருமுடிகள், குழைகள், கடகங்கள், ஆழிகள், மதாணி, ஆடை, சிலம்பு ஆகியவற்றைக் கூறியதன்மூலம் அவற்றை அணிந்த உறுப்புநலன்களை உணர்த்தினார்.

( 92 ) நின்பாத தாமரைக்(கு) அன்(பு)ஏதும் இன்றிய நீசன்பொல்லேன்
புன்போதம் மேலிட்ட பொய்யேன் பிழையைப் பொறுத்தருளாய்
அம்போ ருகமலர் ஓரா(று) அலர்ந்த அருட்கடலே
செம்போரி வேலவ னேஇமை யோர்கள் சிகாமணியே.

**குறிப்புரை** : நீசன்= இழிந்தவன். புன்போதம்= அற்ப அறிவு. அம்போருகமலர்=,தாமரை மலர். சிகாமணி= தலையிற்சூடும் மணி.

**பொழிப்புரை** : ஆறுதாமரைமலர்களாகிய திருமுகங்கள்மலர்ந்த அருட்கடலே! சீரார்போரூர் முருகப்பிரானே! தேவர்கள் தம்தலையில் சூடிக்கொண்டாடும் தலைமணியே! உன் திருவடித்தாமரைக்குச் சிறிதும் அன்பில்லாதவனாகிய இழிந்தவனும், பொல்லாதவனும் ஆன அற்பஅறிவு மேலிட்ட பொய்யனும் ஆகிய எனது பிழைகளைப்பொறுத்து எனக்கு அருள்க.

( 93 ) செப்புக் கவித்தன்ன வன்குரத் தால்மண் சிதைத்(து)எறியும்
துப்(பு)உற்ற மாவிற்கு இணையாக ஓதினர் சொல்கணத்தே
ஒப்பற்ற மூஉல கும்போய்த் திரும்பும் ஒருமனத்தை
எப்பெற்றி யால்உரைத் தார்சம ராபுரி எண்குணனே.

**குறிப்புரை** : செப்புக்கவித்தன்ன= சிமிழால் மூடியதுபோன்ற. வன்குரம்= வலிமையான குளம்பு. துப்பு= வலிமை. மா= குதிரை. ஒருமனத்தே= ஒப்பற்ற மனத்தால். எப்பெற்றி= எவ்வகை. எப்பெற்றியால் உரைத்தார் சொல்.என்க.

**பொழிப்புரை** : சிமிழால் மூடியதுபோன்ற வலிமையான குளம்பினால் நிலத்தக்கீறி எறியும் வலிமையான குளம்புடைய குதிரை போன்றது, ஒருநொடியில் ஒப்பற்ற மூவுலகமும்போய்த் திரும்பும் மனம் என்று கூறுகின்றனர். திருப்போரூர் என்குணத்தனே! எவ்வகையில் இவ்வாறு கூறினர் என்பதைச் சொல்லியருள்க.

**இலக்கணக்குறிப்பு** ; இச்செய்யுள் விரைவுபற்றி வந்த உவமையணி.

( 94 ) மெய்யாம் நெறிக்கண் அடியேன் செலுத்த விலங்கிமிகு
பொய்யாம் நெறிக்கண் எனைக்கொடு போம்உளப் போர்க்களிற்றை
ஐயா நின(து)அரு ளாம்கயிற் றால்பிணித்(து) ஆனதண்டை
செய்ஆரும் தாள்கந்து சேர்ப்பாய்தென் போரியம் சேவலனே.

**குறிப்புரை** : மெய்= ஞானம். விலங்கி= விலகி. உளப்போர்க் களிறு= மனமாகிய வலியபோரிடும் ஆண்யானையை. ஆன= சிறந்த. செயாரும்= செம்மையான. தாள் கந்து= திருவடியாகிய கட்டுத்தறி.

**பொழிப்புரை** : தலைவனே! அழகிய திருப்போரூரில் சேவற்கொடி ஏந்தி எழுந்தருளியுள்ளவனே! அடியேன் என்னுள்ளத்தை ஞானநெறியில் செலுத்த முயலும்போது, அதிலிருந்து மிகவும் விலகி, மிகப்பொய்யான நெறியில் என்னை ஈர்த்துச்செல்லும் என்மனமாகிய வலிமையான ஆண்யானையை உனது அருளாகிய கயிற்றால்கட்டி, சிறந்த உனது தண்டையணிந்த திருவடியாகிய கட்டுத்தறியில் சேர்த்தருள்க.

**விளக்கம்** : மனத்தைத் தம்வழியில் ஈர்த்துச் செல்வன ஐம்பொறிகளாகிய ஆண்யானைகள் என்பார் திருவள்ளுவர்.

" உரனென்னும் தோட்டியான் ஓரைந்தும் காப்பான்
வரன்என்னும் வைப்பிற்குஓர் வித்து. " ( திருக்குறள் 24 )

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முற்றுருவகவணி.

( 95 ) உள்உறு புன்நினை(வு) எல்லாம் ஒழிந்(து)இங்(கு) உணர்வரிய
நள்இருள் அன்ன அஞ்ஞான மும்தீர்ந்து நலன்உதவும்
தெள்ளிய பேரருள் ஊடே கலந்(து)இன்பு சேர்ந்திருப்பக்
கள்ளநெஞ் சேற்கும் வருமோதென் போரியம் காங்கயனே.

**குறிப்புரை** : உள்= உள்ளம். புன்நினைவு= அற்ப எண்ணங்கள். நள் இருள்= செறிந்த இருள். அஞ்ஞானம்= அறிவின்மை. தெள்ளிய= தெளிந்த. பேரறிவு= ஞானம்.

**பொழிப்புரை** : அழகிய போரூரில் எழுந்தருளியுள்ள காங்கேயனே! உள்ளத்தில் மண்டியுள்ள அற்பஎண்ணங்கள் எல்லாம்ஒழிந்து, உணர்வதற்கரிய செறிந்த இருளொத்த அறிவின்மை - ஆணவம் - தீர்ந்து, நன்மைதரும் தெளிந்தபேரருளில் கலந்து இன்புற்றிருக்கும்நிலை வஞ்சனையான உள்ளம் உடைய எனக்கும் வாய்க்குமோ.

**விளக்கம்** : ஆணவம் அனைவரிடத்தும் இருப்பினும் அது தன்இருப்பையோ, ஆன்மாவின் தன்மையையோ காட்டாது என்பதை

ஒருபொருளும் காட்டாது இருள்உருவம் காட்டும்
இருபொருளும் காட்டாது இது. ( திருவருட்பயன். 23. )

என்று குறிக்கும்.

( 96 ) எல்லாப் பொருள்களும் தானாகித் தான்ஒன்றில் ஏய்வ(து)இன்றாய்ச்
சொல்லால் கருத்(து)அத னால்சென்று கூடரும் சோதியதாம்
மல்ஆ ரணப்பொருள் நாயேற்கும் ஈய மதித்திகொல்லோ
நல்லார்க்(கு) இனிய குகனேதென் போரிஎன் நாயகனே.

**குறிப்புரை** : ஏய்வது= பொருந்துவது. கூடரும்= அடைதற்கரிய. மல்= வளம். ஆரணப்பொருள்= மறையின் உட்பொருளை.

**பொழிப்புரை** :அழகிய திருப்போரூரில் உள்ள என்தலைவனே! நல்லவர்கட்கு இனிமைசெய்யும் முருகப்பிரானே! பொருள்கள் அனைத்தும்ஆகி, தான் எந்தஒன்றிலும் பொருந்தாது, சொல்லாலும் கருத்தாலும் அடையவியலாத பேரொளி வடிவாக விளங்கும் வளமான மறையின் உட்பொருளை, நாய்போன்ற கீழான எனக்குத்தர நினைப்பாயோ! தந்தருள்.

( 97 ) எண்ணிய எண்ணிய வாறே சிறியனுக்(கு) ஈந்தருளும்
புண்ணிய னேநின் மகிமையை ஓர்ந்திலன் பொய்யவனேன்
கண்ணுறு மாமணி யேகருத் தூறும் கனிரசமே

தண்அளி மாமுகி லேபோரி மேவிய சண்முகனே.

**குறிப்புரை** : தண்அளி= கருணை / குளிர்ச்சி.

**பொழிப்புரை** : கண்ணின் கருமணியே! என்கருத்தில் சுரக்கும் கனிச்சுவையே! கருணை வடிவானசிறந்த கார்மேகமே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகனே! அற்பனாகிய எனக்கு, நான் நினைத்தவற்றை நினைத்தவறே கொடுத்தருளும் புண்ணியனே! உனது பெருமையைப் பொய்யானவனாகிய நான் எண்ணிப்பார்க்கவில்லை. அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : மாமணி, கனிரசம், மாமுகில் - உருவகங்கள்.

( 98 ) உள்ளத்(து) அழுக்கினை எல்லான் அகற்றி உனதுபத
வள்ளக் கமலத்(து) எழுநற(வு) ஆனந்த வாரியிலே
கள்ளச் சிறியேனை வைத்(து)ஆள வேண்டும் கழனிமடை
அள்ளத் திறந்திடும் வாளைகள் போரி அயிலவனே.

**குறிப்புரை** : பத வள்ளக் கமலம்= திருவடியாகிய தோணிபோன்ற தாமரை. எழுநறவு= சுரக்கும் தேன். அள்ள= நீக்கும்பொருட்டு. அயில்= அழகு / கைவேல்.

**பொழிப்புரை** : நன்செய் நிலத்து மடையினை நீக்கும்பொருட்டு அதனைமுட்டித் திறக்கும் வாளை மீன்களுடைய திருப்போரூர் அழகனே! எனது மனத்தில் படிந்துள்ள அழுக்கையெல்லாம் அகற்றி, உனது திருவடியாகிய தோணிபோன்ற தாமரையில் சுரக்கும்தேனாகிய பேரின்பக்கடலில் வஞ்சனையுடைய கீழான என்னையும் வைத்து ஆட்கொள்ளவேண்டும்.

( 99 ) மலம்சேர் கடத்தைப் பிணிக்கூட்டை ஒன்பது வாயில்பையை
நலம்சால எண்ணிக் கடையேன் களித்தனன் நாய்ப்புலையேன்
திலம்சார் தைலம் எனஎங்கும் ஆனசி வானந்தத்தேன்
கலந்தே களிப்ப(து)என் றோசம ராபுரிக் காங்கயனே.

**குறிப்புரை** : மலம்= அழுக்குகள். கடம்= உடம்பு. வாயில்= துளை. சாலநலம்= மிகவும் நன்மைதருவது. திலம்= எள்ளு. தைலம்= எண்ணெய். சிவானந்தத் தேன்= ஆனந்தவடிவான சிவம்தரும் தேன் - பேரின்பம்.

**பொழிப்புரை** : நாய்போன்ற கீழானநான், பலவகை அழுக்குகளுடனான உடம்பை, நோய்கள் தங்கிய கூட்டினை, ஒன்பதுஓட்டைகள் கொண்டபையை, நலம்மிக்க தருவதாக எண்ணிக்களித்தேன். திருப்போரூர் முருகப்பெருமானே! எள்ளில் எங்குமுள்ள எண்ணெய்போல் எல்லாவிடங்களிலும் உள்ள நீதரும் ஆனந்தவடிவான பேரின்பத்தேனில் நான்கலந்து களிப்பது எந்நாளில் ? இப்போதே அதனைஅருள்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 100 ) எண்ணிலி காலத்தின் பின்னர்இக் காயம் இனி(து)அளித்தாய்
நண்ணுறும் ஈதினும் மெய்ப்பத்தி ஈந்திலை நாய்அடியேன்
புண்ணிய பாவம்என்(று) ஏகும் பரகதி என்(று)அடைவேன்
விண்ணுறு தேவரும் சூழ்போரி வாழ்கின்ற வேலவனே.

**குறிப்புரை** : எண்ணிலி= எண்ணிக்கை இல்லாத. காயம்= உடம்பு. நண்ணுறும்= பெற்ற. ஈதினும்= இப்பிறவியிலும். என்றுஏகும்= என்று என்னைவிட்டோடும். பரகதி= வீடுபேறு. சூழ்= வலம்வந்து வணங்கும்.

**பொழிப்புரை** : வானுலகில் வாழும் தேவர்களும் வலம்வந்து வணங்கும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானே! நீ எனக்கு எண்ணிக்கை இல்லாத காலத்திற்குப் பிறகு இந்த மானிடப்பிறவியைத் தந்தாய். ஆனால் பெற்ற இப்பிறவியிலும் உன்மீது எனக்கு உண்மையான பத்தியைத் தரவில்லையே! நாய்போன்ற அடியேன் செய்த புண்ணியங்களும் பாவங்களும் என்னைவிட்டு என்று ஓடும்? அதனால் வீடுபேறு அடைவேன்!

**விளக்கம்** : செய்த புண்ணிய பாவங்களுக்கு ஏற்பப் பிறவிகள் பற்பலவாய் அமையும். உயிரின் பிறவிகள்பற்றி,

"புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லா மனிதராய் பேயாய்க் கணங்களாய்
வல்அசுரர் ஆகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா நின்றஇத் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்துஇளைத்தேன் எம்பெருமான் " ( திருவாசகம். சிவபுராணம் )

உயிர்த்தன்மை குறிக்கும் சுவாசம், உணவுஉண்ணல், தன்னப்போல் பிறிதொரு உயிரை ஈனுதல் முதலியன உயிர்களுக்கே உண்டு. கல்லுக்கு இல்லை. பிறப்புப்பற்றியும் இளைத்தல் பற்றியும் இதன் இறுதியில் கூறுவதால், கல்லாய் மனிதரய், என்ற பாடமன்றிக், கல்லா மனிதராய் என்ற பாடம் கொள்ளப்பெற்றது. இதுபற்றிய " கல்லாய் மனிதராய் " என்ற எனது கட்டுரைகாண்க.

( 101 ) திரஅணி நீடிய போரூர்கை கூப்பிச் செழுங்கமலச்
சரவண வாவியில் நீராடித் தங்கச் சதங்கைகொஞ்சும்
குர(வு)அணி பாதம் பணிவோர்க்(கு) இனிமை கொடுக்கும்பிரான்
அரவுஅணி வோன்கும ராஅடியேன்உன் அடைக்கலமே.

**குறிப்புரை** : திர அணி நீடிய= நிலையான அழகு நிலைத்த. கொஞ்சும்= மென்மையாக ஒலிக்கும் குரவு= குராமலர். இனிமை= வீடுபேற்று இன்பம். அரவு அணிவோன்= சிவபிரான்.

**பொழிப்புரை** : நிலையான அழகுநிலைத்த திருப்போரூரை நினைத்துக் கைகூப்பி வணங்கி, வளமான தாமரைகள் மலர்ந்த சரவணப்பொய்கையில் நீராடி, நாகம் அணிந்த சிவபிரான் மகனே! அடியேன் உன்அடைக்கலம் என்று பொற்சதங்கை மென்மையாக

ஒலிப்பதும், குரவமலர்கள் அணிந்ததும் ஆகிய திருவடிகளை வணங்குகிறவர்களுக்கு வீடுபேற்றின்பம் வழங்கும் தலைவன் திருப்போரூரன் ஆவான்.

****************

## திருப்போரூர்ச் சந்நிதி முறை

### திருவடிப்பற்று-1

**************************

வண்ணத்தாழிசை

-------------------------------

( 1 ) இந்திரப்பெய ருடையான்முதல் எவரும்செறி வளனுக்(கு)
இடையூறுகள் வாராவகை எணிமுன்பணி களி(று)என்
சிந்தைப்ரிய என்கண்சிறு பிள்ளாய்வரு கென்றே
திருமார்(பு)இறு கப்புல்கிய தெய்வச்சிர மணியே
அந்திப்பிறை முடியான்அருள் இன்பக்கனி நினைவந்(து)
அண்டிபணி தொண்டர்க்(கு)இனி அருளும்படி நினையாய்
சந்தப்பொழில் இடைவெற்(பு)அன தந்திக்களி(று) உலவும்
தண்சாரல்ம ணம்சூழ்தரு சமராபுரி யானே.

**குறிப்புரை** : செறிவளன்= மிக்க செல்வச்சிறப்பு. எணி= எண்ணி. ப்ரிய= விருப்பமான. கண்= கண்ணே. சிறுபிள்ளாய்= இளம்பிள்ளையே. புல்கிய= தழுவிய. தெய்வச்சிரமணி= தெய்வசிகாமணி - தெய்வங்களுக்கு எல்லாம் தலைமணி.கனி= கனியே. நினையாய்= நினைந்தருள்க. சந்தம்= சந்தனம். அன= போன்ற தந்திக்களிறு= தந்தமுடைய ஆண்யானை. தண்சாரல் மணம் = குளிர்ந்த சாரலின் நன்னிலை. சமராபுரி= திருப்போரூர்.

**பொழிப்புரை** : சந்தனச்சோலைக்கண் உள்ள மலைபோன்ற ஆண்யானை உலவும்குளிர்ந்த சாரலின் நன்னிலை மணக்கும் திருப்போரூரானே! இந்திரனாய் இருக்கும் புகழுடையவன்முதல் எத்தகையவரும் தமது மிக்கவளவாழ்வுக்கு இடையூறு வராதவகையை நினைத்து முற்பட்டு வணங்கும் ஆண்யானையே! என்மனத்துக்கு விருப்பமானஎன் கண்ணே! என்றும் இளம்பிள்ளையே! வருக என்று மூன்றாம்பிறை சூடிய சிவபிரான், தனது தெய்வத்தன்மை பொருந்திய மார்புடன் இறுகத் தழுவிய தெய்வசிகாமணியே! அருளேவடிவான இன்பக்கனியே! நின்னை விரும்பிவந்துசேர்ந்து வணங்கும் தொண்டர்க்கு அருள்புரியும் வகையை எண்ணி அருள்க.

**விளக்கம்** : சூரபன்மன் முதலானவர்களிடமிருந்து காத்தவனாதலின், இனிஅத்தகு துன்பம்வரக்கூடாது என்று முன்கூட்டிப் பணிந்தனர் என்றார்.

**இலக்கணக்குறிப்பு** : செறிவளன் - வினைத்தொகை. வாரா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். எணி, அன - இடைக்குறைகள். முடியான் - வினையாலணையும்பெயர். இன்பக்கனி - உருவகம். நினையாய் - முன்னிலைஒருமை வினைமுற்று. வெற்பு அன தந்திக்களிறு - உவமையணி.

( 2 ) வேய்ஒன்(று)உறு தோள்மா(து)உமை வெற்(பு)அன்ன தனத்தின்
மிசைஊ(று)அரு விப்பாலினை மிகஉண்டுக ளித்த
வாய்குங்கும வாசம்தரு வள்ளால்எனை விள்ளா

வகைஆளுநி னக்(கு)ஒதுகைம் மாறும்சிறி(து) உளதோ
நாய்ஒன்றுவ ளர்த்தோன்விட நாடான்அது போலும்
நல்லோர்கள்அ டைந்தோர்களை எள்ளார்அது போலும்
தாய்ஒன்றிய சேயைப்புடை தள்ளாள்அது போலும்
தமியேனைவி டேல்அண்டினன் சமராபுரி யானே.

**குறிப்புரை** : வேய்= மூங்கில். அருவிஊறுபால்= அருவிபோல் பெருகும்பால். குங்குமவாசம்தரு வாய்= குங்குமப்பூப் போல் மணக்கும் வாய். விள்ளாவகை= பிரியாத வகை. விட நாடான்= துரத்த விரும்பான். எள்ளார்= இகழ்ந்து ஒதுக்கார். புடைதள்ளாள்= அருகில் இருந்து ஒதுக்காள். விடேல்= கைவிடாதே. அண்டினன்= சேர்ந்தேன்.

**பொழிப்புரை** : திருப்போரூரில் எழுந்தருளியுள்ளவனே! மூங்கிலுடன் ஒத்துச் சிறந்த தோள்களுடைய உமையம்மையின் மலைபோன்ற முலைகளில் அருவிபோல் ஊறும் பாலினை மிகுதியாகப் பருகிய குங்குமப்பூ மணக்கும் வாயுடைய வள்ளலே! என்னை நீ பிரியாது ஆண்டருளும் தன்மைக்குக் கைம்மாறு ஏதுமில்லை. ஒரு நாயினை வளர்த்தவன் அதைத்துரத்த விரும்பான்; நல்லவர்கள், தன்னை வந்து அடைந்தவர்களை இகழ்ந்து ஒதுக்கார்; தாயொருத்தி தன்குழந்தையை தன்னிடமிருந்து தள்ளிவைக்காள்
அதுபோல, உன்னைவந்தடைந்தேன்; என்னைக்கைவிடாதே!

**இலக்கணக்குறிப்பு** : வேய் ஒன்று தோள்; வெற்பு அன்னதனம் - உவமை விரிகள். அருவிப்பால் - உவமைத் தொகை. உளதோ - ஓகாரம் எதிமறைப்பொருளது. இச்செய்யுள் பல்பொருள் உவமையணி.

( 3 ) ஓதும்கலை யாவும்மனம் ஓடாதுநி றுத்தி
உன்பாதநி ழற்கீழ்உறல் உயர்நன்(கு)என ஓத
வாதம்சொலி ஏதம்சொலும் மனமோடுசு ழன்ற
மதிஇன்றிய சிறியேன்உனை வந்(து)அண்டுவ(து) என்றோ
தீ(து)இன்றிய குறநாயகி சேரும்திரு மார்பா
சிவனார்தரு குமராஉமை சிறுவாஅரி மருகா
தா(து)ஒன்றிய வனசத்தடம் மீ(து)ஒன்றிய எகினம்
தண்மாலையில் வண்காஅடை சமராபுரி யானே.

**குறிப்புரை** : மனம் ஓதும்கலை யாவும் ஓடாதுநிறுத்தி. உறல்= பொருந்துதல். ஓத= சான்றோர் கூற. ஏதம் சொலும்= கேடானவற்றைக்கூறும். சுழன்ற= சுற்றித்திரிந்த. தாதுஒன்றிய= மகரந்தம் மிக்க. வனசத்தடம்= தாமரைக்குளம். ஒன்றிய= இருந்த. எகினம்= அன்னப்பறவை. வண்கா= வளமான சோலை.

**பொழிப்புரை** : குற்றமேதும் இல்லாத குறமகளாகிய வள்ளியைப்புணரும் அழகிய மார்பனே! சிவபிரான் தந்த குமரனே! உமையம்மையின் மகனே! திருமால் மருமகனே! மகரந்தம் மிக்க தாமரை மலர்கள் மலர்ந்த குளத்தில் இருக்கும் அன்னப்பறவை குளிர்ந்த மாலைப்பொழுதில் வளமான சோலைக்கு வந்துதங்கும் திருப்போரூரானே! மனத்தைச் சிறந்தகலைகள் அனைத்தின்கண்ணும் ஓடாது கட்டுப்படுத்தி உனது திருவடிநிழலில்

பொருந்துமாறு செய்வதே உயர்ந்த நற்செயலாகும் என்று சான்ரோர் கூறியும், விவாதமிட்டுக் கேடானவற்றில் செல்லும் மனத்துடன் கூடவே அலைந்த அறிவில்லாத கீழானநான் உன்னைவந்தடைவது எந்நாளில்! இன்றே அருள்க.

( 4 ) ஏலும்மனம் ஓடிப்பொருள் யாதொன்றினை நாடி
இசையும்பொழு தேனும்அதை எண்ணாதுவி டுத்(து)உன்
வேலும்சிறை மயிலும்கன தோளும்சிறு தாளும்
வீ(று)ஆ(று)அருள் முகமும்உன வேண்டும்சிறி யேனே
கோலும்மறை நாலின்முடி மேல்ஒன்றிய தேவே
குணகுஞ்சரி கோவேசுரர் கொண்டாடிய வாழ்வே
தாலம்புகழ் அணியேஎனது உயிர்நின்றுஒளிர் மணியே
தவமான்உறை கணியேநல சமராபுரி யானே.

**குறிப்புரை** : மனம் ஓடி ஏலும்பொருள்= மனம் சென்றுபொருந்தும் பொருள். இசையும்பொழுதேனும்= வாய்க்கும்பொழுதாவது. சிறை= சிறகு. கன= பருத்த - திரண்ட. வீறு= பொலிவு. உன= நினைக்க. கோலும்= திரண்ட. முடி= உச்சி. குணகுஞ்சரி= நற்குணத் தெய்வயானை. தாலம்= உலகம். தவமான்= தவத்தில் சிறந்த வள்ளிநாச்சியார். கணி= வேங்கைமரம்.

**பொழிப்புரை** : திரண்ட நான்மறையின் உச்சியில் பொருந்திய தெய்வமே! நற்குணத்தெய்வயானை யம்மையின் தலைவனே! உலகம்புகழும் அழகே! என்னுயிருள் பொருந்தி ஒளிவீசும் மாணிக்கமே! தவத்தில் சிறந்த வள்ளிநாச்சியார் தங்கும் வேங்கைமரமே! நலம் தரும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ளவனே! மனம்சென்றுபொருந்திய எந்தஒருபொருள் எனக்கு வாய்த்தபிறகாவது, அதையே நினைக்காமல் ஒதுக்கி, உனது வேல், சிறகுடைய மயில், திரண்டதோள், சிறிய திருவடி, பொலிவுடன் அருள்வடிவான ஆறுதிருமுகம் ஆகியவற்றையே அற்பனான நான் எண்ண அருள்புரிய வேண்டும்.

**விளக்கம்** : விரும்பியபொருள் கிடைத்தபிறகு அதுபற்றியும், அதன்வழியே பிறபற்றியும் எண்ணுவது உலகியலாதலின் அவ்வழி மனத்தை ஓடவிடாது வேல்முதலானவற்றை நினைக்கஅருளுக என்றார்.

( 5 ) உருவும்தரு புகழும்பல கலையும்உயர் அறிவும்
ஓரும்திகழ் குணமும்பலம் ஆரும்தவ நெறியும்
திருவும்மதி மதியும்பதி கதியும்நினை ஒருநாள்
சேவித்தவர் தமைவந்(து)எதிர் தெரிசிப்பினும் வருமே
மருவும்சிர புரமாநகர் வந்(து)எண்ணிலி பேரை
மாறாவள வீ(டு)ஏறிட வைகும்மறை முதல்வா
தருவும்மிகு நிதியும்சுர பியும்மன்நக ரத்தார்
தண்மேகம்எ னப்பொன்பொழி சமராபுரி யானே.

**குறிப்புரை** : ஓரும் திகழ்= ஆராய்ந்து விளங்கும். பலம் ஆரும்= வலிமையான. திரு= செல்வம். மதிமதி= அறிஞர் மதிக்கும் நிதானம். பதிகதி= பதியை - இறைவனை அடையும் வழி. சிரபுரம்= சீர்காழி. மாறாவள வீடு= நிலைகுலையாத வளமான வீடுபேறு. மறைமுதல்வா= திருஞானசம்பந்தனே. தரு= கற்பகமரம். சுரை= காமதேனு. மன் நகரத்தார்= தேவருலக் அமராவதியினர்.

**பொழிப்புரை** : சீர்காழியில் பிறந்து, எண்ணற்றபேர் நிலைகுலையாத வளமுடைய வீடுபெறடைய வாழ்ந்த திருஞானசம்பந்தரே! தேவருலக அமராவதியினர்; கற்பகமரம், மிக்க செல்வம், காமதேனு ஆகியவற்றைக் குளிர்ச்சிபொருந்திய மேகம்போல் பொழியும் திருப்போரூர் முருகப்பெருமானே! அழகு, உலகுதரும் புகழ், பலகலை, உயர்ந்த அறிவு, ஆராய்ந்து விளங்கும் நற்குணம், வலிமையான தவவாழ்வு, செல்வம், அறிஞர்மதிக்கும் நிதானம், இறைவனை அடையும்வழி முதலியன உன்னை ஒருநாள்வந்து கண்டு வணங்கியவர்க்கும் வந்துசேரும்.

**விளக்கம்** : சீர்காழியில் சிவபாத இருதயர்க்குப் பகவதியார் திருவயிற்றில் கருக்கொண்டு பிறந்த திருஞானசம்பந்தர், முருகப்பெருமானல்லர். முருகப்பிரானைப் போற்றும் கந்தபுராணமும், அருணகிரியாரும், பிறகௌமார அடியவர்களும் " பெம்மான் முருகன் பிறவான் இறவான் " என்ற கொள்கையினர். திருஞானசம்பந்தரைப் "பிறப்பொடு இறப்பும் இல்லா " முருகப்பிரானாகக்கூறும் வழக்குப் பிற்காலத்தில் ஊடுருவியது. அதனைச் சாத்திர தோத்திரங்களில் அழுத்தமான புலமையும், முருகபெருமான் அருளில் திளைத்த பழுத்தபத்திமையும்ம்வாய்த்த அருட்டிருசிதம்பரம் சுவாமிகள்போன்ற அருளாளர்களும் இவ்வூடுருவலைத் தழுவிப் பாடிருப்பது அக்காலக் கோளாறு என்க.

( 6 )

அத்தமனம் உதயம்சிறி(து) அறியாரவி போல்உன்
அருளாகிய ரவிஎன்உளம் அகலாதுநி றைந்தே
சித்தம்மன இருளும்பல தத்வம்எனும் உடுவும்
சிறுபோதவெண் மதியும்அகல் சீர்என்(று)இனி வருமே
நித்தன்மகிழ் தரஓர்மொழி அத்தம்புகல் குரவா
நீலக்கல பத்தோகைகள் மாலைப்புயல் கண்டு
தத்தாதிமி தித்தாதிரு தெய்த்தெய்என ஆடத்
தண்காஅளி பண்பாடிய சமராபுரி யானே.

**குறிப்புரை** : ரவி= ஞாயிறு. சித்தம் மன இருள்= உட்கருவியாம் சித்தமாகிய மனத்துஆணவம். பலதத்வம் எனும் உடு= பலவகைத்தத்துவங்களாகிய விண்மீன்கள். சிறுபோத வெண்மதி= சிற்றறிவாகியவெண்ணிலா. அகல் சீர்= விலகி மறையும் சிறப்பு. நித்த= சிவபிரான். ஓர்மொழி= ஒப்பற்ற சொல் - ஓங்காரம், அத்தம்= பொருள். குரவா= குருவே. தோகைகள்= மயில்கள். புயல்= கார்மேகம். தத்தாதிமி தித்தாதிரு தெய் தெய் - இவை கூத்துக்குரிய - நடனத்துக்குரிய தாளக்கட்டுகள். அளி= வண்டு.

**பொழிப்புரை** : நீலநிறத்தோகையுடைய மயில்கள் மாலைக்காலக் கார்மேகம்கண்டு தத்தாதிமி தித்தாதிரு தெய்த்தெய் என்று நடனமாட, அதற்கு ஏற்பக் குளிர்ந்த சோலையில் உள்ள வண்டுகள் பண்பாடிய திருப்போரூரானே! சிவபிரான் மகிழ ஓங்காரப்பொருள் கூறிய

குருவே! மறைதல் உதித்தல் இல்லாத ஞாயிறுபோல் உனது அருளாகிய ஞாயிறு என்உட்கருவியாகிய -சித்தமாகிய மனத்து அறியாமை - ஆணவம், பலவகைத்தத்துவங்களாகிய விண்மீன்கள், சிற்றறிவு ஆகிய நிலா ஆகியனநீங்கிய சிறப்பு இனி எந்நாளில் எனக்கு வாய்க்கும்? இப்போதே அருள்க.

**விளக்கம்** : அறிவையும் பிறவற்றையும் தன்இருப்பையும் மறைக்கும் ஆணவத்தை இருளென்றும்;. தத்துவங்கள் ஞானத்தின் மிகமிகச்சிறு கூறினைக் காட்டுவனவேயல்லாமல் அதற்குமேல் உணர்த்தாவாதலின் தத்துவங்களை விண்மீன்கள் என்றும்; சிற்றறிவு, தெளிவுற எதனையும் முற்றாக உணர்த்தாதாதலின் அதனை நிலா என்றும் உருவகித்தார்.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் முற்றுருவகவணி.

( 7 ) மறைஆதிய கலைஓதிய வனசப்பெரு மானும்
மண்உண்டுவ டத்தேதுயில் பண்ணும்பெரு மானும்
நறைஆர்இதழ்த் தார்புனைச டைஎம்பெரு மானும்
நாடிக்களி கூரத்தகர் ஏறித்திகழ் வோனே
இறையாகிய அளவாயினும் மறவா(து)உனை நாடி
இன்பத்துயில் கொள்ளும்படி என்புத்தியில்நி றைவாய்
தறைஆதியில் உறைவோர்பணி சரணாபரி புரணா
தண்ஆர்அளி அண்ணாமகிழ் சமராபுரி யானே.

**குறிப்புரை** : வனசப்பெருமான்= தாமரையில் இருக்கும் நான்முகன். வடம்= ஆலிலை. துயில் பண்ணும் பெருமான்= அறிதுயில்கொள்ளும் திருமால். நறை= தேன் / நறுமணம். இதழ்த்தார்= மலர்மாலை. சடைப்பெருமான்= சிவபிரான். நாடிக்களிகூர= மிகவிரும்பி மகிழ. தகர்= ஆட்டுக்கிடா. இறை= நொடி. இன்பத்துயில்= இன்பத்தில் தங்கல். தறை = தரை = இவ்வுலகம். சரணா= திருவடியனே. அண்ணாமகிழ்= நெருங்கிமகிழும்.

**பொழிப்புரை** : நான்மறை முதலியன ஓதித் தாமரையில் வாழும் நான்முகனும், மண் உண்டு ஆலிலையில் அறிதுயிகொண்ட திருமாலும், மணக்கும் கொன்றைமாலை சூடிய சடையுடைய சிவபிரானும் மிகவிரும்பி மகிழ ஆட்டுக்கிடாயில் ஏறியவனே! இவ்வுலகம் முதலிய அனைத்துலகினும்வாழ்கிறவர் வணங்கும் திருவடியுடைய பரிபூரணனே! குளிர்ச்சிபொருந்திய கருணையுடன் நெருங்கி மகிழும் திருப்போரூரானே! நான் இன்பத்தில் - வீடுபேற்றில் - தங்கும்வகையில் என் அறிவில் நிறைவாயாக.

**இலக்கணக்குறிப்பு** : இதழ் - சினையாகுபெயர். தறை - எதுகைநோக்கிவந்த செய்யுள் விகாரம்.

( 8 ) எளியேனைஓர் அடியான்என இன்பத்திரு உள்ளத்(து)
எண்ணிச்சிறு நாயேன்உளம் நண்ணச்சுக வாரிக்
களியேஉல(கு) எங்கும்இஃ(து) அல்லா(து)இலை என்றே
காட்டிப்பின்ம றைத்தாயென் கண்மாயம்இஃ(து) என்றே

களியேஅருள் வெளியேஉயிர் ஒளியேமறை முடிவின்
அம்சொல்புகழ் பஞ்சப்பிரணவம் ஓதிய கிளியே
தளிரேயன கையார்மயில் எனவேநட மாடும்
சசிவெண்சுதை மாடம்செறி சமராபுரி யானே.

**குறிப்புரை** : சுகவாரிக்கு அளியே= பேரின்பக்கடலினை அருள். இஃது= பேரின்பக்கடல். கண்மாயம் இது என்றே மறைத்தாய். கண்மாயம்= கண்கட்டு வித்தை. களி= தேன். பஞ்சப்பிரணவம்= பிரணவப்பொருள். அன= ஒத்த. சசி வெண்சுதை மாடம்= சந்திரனின் வெண்மையான அமுதத்தால் ஆன மாளிகை. செறி= தொடும்.

**பொழிப்புரை** : தேனே! அருள்வெளியே! உயிர்கட்கெல்லாம் ஒளியாக உள்ளவனே! உபநிடதம் தனது சிறந்தசொல்லால் புகழும் ஓங்காரப்பொருளை, சிவபிரானுக்கு ஓதிய கிளியே! தளிர்போன்ற கைகளுடைய மயிலொத்த மகளிர் நடமாடும் சந்திரனின் வெண்மையான அமுதத்தால் ஆனமாளிகையைத் தொடும் புகழுடைய திருப்போரூர் முருகப்பிரானே! கீழானஎன்னை உனக்கு ஓர்அடியவன்என்று உனது இன்பவடிவான திருஉள்ளத்தில் எண்ணிஅற்பமான என்னுள்ளம் சுகக்கடலினைஅடையச்செய்.து உலகமெங்கும் இப்பேரின்பக்கடலன்றி வேறுஇல்லை என்று காட்டியபின் இவ்வுலகியல் ஒரு கண்கட்டு வித்தை - நிலையானதன்று என்று சொல்லிஅதனை மறைத்தாய்! நிலைத்த பேரின்பத்தை அருள்க.

( 9 ) அவனோ(டுஅவ(ள்) அதுயான்எனும் அலர்கானலை நாடி
யான்செய்தனன் பிறர்செய்தனர் என்(று)இன்பொடு துன்பு
நவமாய்வரு தோறும்மிகு விழைவும்வெகு ளியுமே
நணிநீஉயிர் உள்நின்றுந டத்தும்செயல் நாடேன்
பவவேலைக டத்தும்உன பாதத்துணை வங்கம்
பற்றத்திரு உளம்வைத்(து)அருள் பாலித்திடு கண்டாய்
தவராசர்கள் கவிராசர்கள் புவிராசர்கள் ஞானோ
தயராசர்கள் புடைசூழ்தரு சமராபுரி யானே.

**குறிப்புரை** : அவனோடு அவள் அது யான்= ஆண் பெண் அஃறிணை ஆகிய இவற்றுடன்கூடிய யான் என்ற. அலர்கானல்= பரந்துபட்ட பேய்த்தேர். இன்பொடு துன்பு=இன்பமும் துன்பமும். நவமாய்= புதிதாக. விழைவும் வெகுளியும்= விருப்பும் சினமும் - வெறுப்பும். நணி= பொருந்த. நாடேன்= எண்ணேன். பவவேலை= பிறவிக்கடல். கடத்தும்= கரைஏற்றும். வங்கம்= நாவாய்.

**பொழிப்புரை** : தவத்தில் தலைமையர், கவிதையில் தலைமையர், அரசரில் தலைமையர், ஞான உதயத்தில் தலைமையர் ஆகியோர் எல்லாப்பக்கங்ளிலும் சூழ்ந்த திருப்போர்ரூர் முருகப்பிரானே! ஆண் பெண் அஃறிணை இம்மூவகைஉயிர்களுடன் யான் என்ற அகங்காரம் கலத்தலால், பரந்துபட்ட கானல் நீரினை - பேய்த்தேரினை மெய்யானது என்று விரும்பி, இதைநான்செய்தேன் பிறர்செய்தனர் என்பதால் வரும் இன்பமும் துன்பமும், புதிதாக வரும்போதெல்லாம் அவ்வின்பதுன்பத்தால் விருப்பும் வெறுப்பும் என்பால் பொருந்த, இவற்றைஎல்லாம் நீ என்உயிருள்நின்று என்னை இயக்குகிறாய் என்று எண்ணவில்லை.

பெருமானே! பிறவிக்கடலினைக் கடந்து கரைசேரஉதவும் உன்இருதிருவடியாகிய நாவாயினை அடியேன் பற்றிக்கொண்டு கரைசேர என்மேல் திருஉளம்கொண்டு எனக்கு அருள்பாலிபாயாக.

**விளக்கம்** : உலகஉயிர்க்குலத்தை உயர்திணையை ஆண் பெண் என்றும், அஃறிணையை அது என்றும்கொண்டு கூறும் " அவன் அவள் அது " என்று தொடங்கும் சிவஞானபோதத்தொடரை அப்படியே இவரும்எடுத்தாண்டார். தன்னை உள்நின்று இயக்கும் திருவருளை எண்ணாததால் வரும் யான் என்ற செருக்காகிய அகங்காரமே நான்செய்தேன் பிறர் செய்தார் என்று பேசும். இப்பேச்சின் விளைவு, இன்பம் துன்பம். இவற்றால் கிடைப்பது விருப்பு வெறுப்பு. இவை அனைத்துக்கும் காரணம் " ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே " என்று வாழாமை.

இறைவன் திருவடியே பிறவிப்பெருங்கடல் கடக்க உதவும் தெப்பம் என்பதை,

" பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார் " என்ற திருக்குறள் உணர்த்தும்.

( 10 ) எண்ணின்செய லாயும்எழி லுடன்நின்செய லாயும்
யாதாயினும் நாவாரஇ சைக்கும்செய லாயும்
நண்ணும்செயல் வருதொறுநின் அருளின்செய லாக
நாடும்செயல் என்றேவரும் நாயேன்செயல் போயே
விண்ணும்புகழ் வேலும்விரி கதிரோனைஅ ழைக்கும்
மிளிர்செஞ்சிறை விருதும்தரு கரம்மீதுபி டித்ததோய்
தண்ணந்துறை வாவிக்கயல் பாயக்கம லத்தேன்
சாயக்குட வளைமேய்தரு சமராபுரி யானே.

**குறிப்புரை** : இசைக்கும்= புகழும். நாடும்= நின்அருளை விரும்பும். விண்= தேவர்கள். அழைக்கும்= கூவி அழைக்கும். செஞ்சிறை விருது= சிவந்த சிறகுடைய விருதாகிய சேவல். குடவளை= குடம்போன்று - பருத்த சங்கு. மேய்தரு= பருகும்.

**பொழிப்புரை** : தேவர்களும் புகழும் வேலையும், கதிர்பரப்பும் சூரியனைக் கூவி அழைக்கும் ஒளிரும் சிறகுடைய சேவல்ஆகிய விருதினையும் கையில் ஏந்தியவனே! துறைகளுடன், குளிர்ந்தநீருடையகுளத்துக் கெண்டைமீன்பாய, அதனால் மொத்துண்ட தாமரைசாய அதன்தேனைக் குடம்போல் பருத்த சங்குகள் பருகும் திருப்போரூரானே! என்எண்ணத்தின் வழிப்பட்ட செயலாயினும், அழகுடன்கூடிய உன்செயலாயினும், நாவாரப்புகழும் செயலாயினும், எதுவாயினும் அது என்செயலன்று. உனது அருட்செயலால்தான் அமையும்.

*********************

## 2. திருவடிப்பற்று

********************************

அறுசீர் விருத்தம்

ஆதரவாய் அடியவருக்(கு) அருள்சுரக்கும் ஐங்கரத்தோன் அன்பு கூர்ந்து
மாதவமே எனஅழைத்துப் புயத்(து)அணைத்துத் திருஉளத்து மகிழும் கோவே
ஏதம்உறா(து) அடியேனைக் காத்(து)அளிப்ப(து) உன்கடனாம் இசைப்ப(து) என்னே
போதமலர்க் கற்பகமே போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : ஐங்கரத்தோன்= விநாயகர். ஏதம்= துன்பம். இசைப்பது= சொல்லவேண்டுவது. கற்பகப் போத மலர்= கற்பகமாகிய சிவபிரான் தந்த ஞானமலர். வேள்= ஆண்மகன் / குமரன்.

**பொழிப்புரை** : அடியவர்களுக்கு அன்புடன் அருள்சுரக்கும் விநாயகப்பெருமான், மிக்க அன்புடன் " மாதவமே " என்று அழைத்துத் தன்தோள்கள் பொருந்தக் கட்டியணைத்து மனம்மகிழும் தலைவனே! கற்பகமாகிய சிவபிரான் தந்த முருகப்பிரானாம் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகக்குமரனே! அடியேன் துன்புறாது காத்துக் கருணகாட்டுவது உனது கடமையாகும். இதுதவிர வேறில்லை.

( 2 ) சிறுகுழவி எனைக்காஎன்(று) ஆய்க்(கு)உரையா(து) உறக்காக்கும் செய்தி போலும்
அறிவிலியேன் காத்திடெனா(து) இருக்கவும்காத்(து) அளிப்ப(து)உன் அருட்கே உண்டாம்
உறியில்இடு நவநீதம் உண்டவன்தன் மருகாவேல் உரவா பச்சைப்
பொறிமயில்ஏ றியமுருகா போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : ஆய்= தாய். உறக்காக்கும்= பொருந்தக்காக்கும். செய்தி= செயல். நவநீதம்= வெண்ணெய். உரவா= ஞானியே. பொறி= ஒளி.

**பொழிப்புரை** : உறியில் வைத்த வெண்ணெய்உண்ட கண்ணபிரானுக்கு - திருமாலுக்கு மருமகனே! வேலேந்திய ஞானியே! பசிய ஒளிவீசும் மயிலில் ஏறிவரும் முருகா! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகப்புனிதனாம் குமரனே! நான்கைக்குழந்தை என்னைக்காத்தருள் என்று தாயிடம் வேண்டிக் கொள்ளாதபோதும் தாய் அக்குழந்தையைப் பொருத்தமாகக்காக்கின்ற செயல்போல்; அறிவில்லாத என்னைக்காத்தருள் என்று நான்வேண்டிகொள்ளாது இருந்தபோதிலும் என்னைக்காத்துக் கருணைவழங்குவது உன் அருள் ஒன்றுக்கே உண்டு.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 3 ) தருமவயித் தியனொருத்தன் பிணிதீர்த்தல் கடனாகித் தணித்தல் போலச்

சுருதிகுரு சுவானுபவ மாய்அடியேன் மலம்தவிர்த்தும் சுழலா நின்றேன்
மருவளரும் உன(து)உபய வாரீச பதநிழற்கீழ் வைக்க வேண்டும்
பொருவில்அருள் பொழிமுகிலே போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : தருமவயித்தியன்= காசுபணம் வாங்காமல் அறமொன்றேகருதி வயித்தியம் செய்யும் மருத்துவன். தணித்தல்= நோய்தீர்த்தல். சுருதி குரு சுவானுபவமாய்= மறை , குருமூர்த்தி உதவியால் பெற்ற இன்பஅனுபத்தின் மூலம். மலம் தவிர்த்தும்= மும்மலம் நீக்கியும். சுழலாநின்றேன்= மனம் கலங்குகிறேன். மரு= நறுமணம். வாரீசப்பதம்= தாமரைத்திருவடி.

**பொழிப்புரை** : ஒப்பற்ற அருள்பொழியும் கார்மேகமே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகப் புனிதனாம் குமரனே! மறையின் உதவியாலும், குருமூர்த்தியின் உதவியாலும் இன்பஅனுபவம் பெற்று மலங்களை நீக்கியும் அடியவனாகிய நான் மனம் கலங்குகிறேன். காசுபணம் வாங்காமல் அறமொன்றே கருதும் மருத்துவனொருவன் பிறர் நோய்தீர்ப்பதைக் கடமையாகச்செய்தல் போலநீ என்னை உனது மணக்கும் தாமரைத்திருவடியின்கீழ் இருத்துதல் வேண்டும்.

**விளக்கம்** : இருவினை ஒப்பு மலபரிபாகம் வாய்த்தபோதிலும், மனம்கலங்கா இன்பம்துய்க்க அருட்சத்தி பதிதல் வேண்டுமாதலின், அருட்சத்தியாகிய திருவடிக்கீழ் வைக்க வேண்டுகிறார்.

( 4 ) என்னைஒரு பொருளாகத் திருவுளத்தில் அடைத்தாய்க்(கு) இங்(கு)எதுகைம் மாறு
மின்னனைய சடாமகுடப் பெருமான்கண் களிக்கவரும் விறல்வே லோயே
உன்னைமற வாதுஉன்னாது) உறுவேனை உன்னடியான் என்ன வைத்தாய்
பொன்னனைய திருத்தாளா போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : அடைத்தாய்= காத்துவைத்தாய். கைம்மாறு= பதில்உதவி. விறல்= வெற்றி. உன்னாது= நினைக்காமல்.

**பொழிப்புரை** : பொன்போன்ற அழகிய திருவடியனே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகப்புனிதனாம் குமரனே! மின்னலைஒத்த சடைமுடியுடைய சிவபிரான் கண்கள் களிக்கவரும் வெற்றிவேலா! உன்னை மறவாது நினைத்தும் நினைக்காதும் வாழ்கிற என்னை உன்அடியவனாகக் கருதினாய்! என்னை ஒருபொருளாகக்கருதி உன்திருவுள்ளத்தில் காத்துவைத்த உன்கருணைக்குப் பதில்உதவி ஏதுமில்லை.

**விளக்கம்** : நினைத்தும் நினைக்காதும் வாழ்தலாவது ஒருபொழுது நினைத்தும், ஒருபொழுதுநினைக்காதும் வாழ்தல் என்ற உலகியல்.

( 5 ) உவமையறு பவசலதி கடத்திஇம்மா னிடப்பிறப்பில் உதிக்கச் செய்து
நவம்மருவும் உனதுபதம் நாடவைத்தாய் அதைமறந்தேன் நாயி னேனே
கவலைஎலாம் அற்(று)உனது திருவடிக்கீழ் இருக்கஇனிக் கருணை செய்யாய்

புவனைகரத் தவமணியே போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : பவசலதி= பிறவிக்கடல். கடத்தி= கரையேற்றி. நவம்= புதுமை. செய்யாய்= செய்தருள். புவனை= புவனங்கட்கு உரியவள் - உமையம்மை

**பொழிப்புரை** : உமையம்மையின் கைககளில் விளங்கும் தவமணியே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுதிருமுகப் புனிதனாம் குமரனே! உவமை கூறுதற்கரிய எண்ணற்ற பிறவிக் கடலிலிருந்து கரையேற்றி, இந்த மானிடப்பிறப்பில் என்னைப் பிறக்கவைத்து, எந்நாளாளும் புதுமையான உன்திருவடிகளை நாடுமாறு செய்தாய். நாய்போன்றநான் உன்திருவடிகளை மறந்தேன். ஆயினும், இனி எக்கவலையும் இல்லாமல் உனது திருவடியின்கீழ் இருப்பதற்குக்கருணைசெய்வாயாக.

**விளக்கம்** : இறைவன் திருவடிநிழலில் இருப்பதே அடியவர்கள் விழைவு - காரைக்கால் அம்மையின் வேண்டுகோள்.

" அறவாநீ ஆடும்போது உன்னடியின்கீழ் இருக்க என்றார் " ( பெரியபுராணம். 1781 )

( 6 ) மயக்கம்இடர் காணாநின் மலர்ப்பாதப் பேரொளியில் வயங்கா நின்ற
இயக்கம்அறும் ஆனந்தக் கடல்படிவது எந்நாளோ ஏழை யேனே
நயக்கும்மணப் பைம்பூவே நாகர்பர வியகோவே நறவே காவே
புயல்கருணை பொழிதேவே போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : வயங்காநின்ற= விளங்குகிற. இயக்கம் அறும்= செயலற்ற. புயல்கருணை= கருணைமழை, நயக்கும்= விரும்பும்.

**பொழிப்புரை** : அனைவரும்விரும்பும் மணம்மிக்க புதுப்பூவே! நாகருலகத்தவர் போற்றிய அரசே! தேனே! பசுஞ்சோலையே! கருணைமழை பொழியும் தெய்வமே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகப் புனிதனாம் குமரனே! மனமயக்கமோ துன்பமோஇல்லாத உனது மலர்போன்ற திருவடிகளின் பேரொளியில் விளங்குகிற செயலற்ற பேரின்பக்கடலில் அற்பனாகியநான் திளைப்பது எந்நாளில்? இப்போதேஅருள்.

**இலக்கணக்குறிப்பு** : வயங்காநின்ற - ஆநின்று - நிகழ்கால இடைநிலை.

( 7 ) மங்கியும்உற் பவித்தும்உழல் வல்இடரில் புகுதாமல் மதிஇல் லேனை
இங்(கு)உனது பதநிழல்கீழ் வைத்தியேல் உய்கேன்மற்(று) ஏழை யேனே
கொங்(கு) அலரும் பைங்கூந்தல் குறமாதின் கணவாஎண் குணவா சூழ்ந்த
பொங்கர்அளி பண்பாடும் போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : மங்கியும்= இறந்தும். வல்= வலிமையான. கொங்கு= தேன். பைங்கூந்தல்= வளமான - நீண்டகூந்தல். பொங்கர் அளி= சோலை வண்டுகள்.

**பொழிப்புரை** : தேன்பிலிற்றும் மலர்சூடிய நீண்ட கூந்தலுடைய வள்ளிநாச்சியாரின் கணவனே! எண்குணத்தனே! சோலையைச் சூழ்ந்த வண்டுகள் இசைபாடும் திருப்போரூரில்

எழுந்தருளியுள்ள ஆறுமுகப் புனிதனாம் குமரனே! இறந்தும்பிறந்தும் அனுபவிக்கும் வலிய துன்பத்தில் புகாமல், அறிவில்லாத என்னை உனது திருவடிநிழலில் இப்போதுவைத்தால் மட்டுமே அற்பமானநான் ஈடேறுவேன்.

**விளக்கம்** : எண்குணங்களாவன : தன்வயத்தன் ஆதல், தூய உடம்பினன் ஆதல், இயற்கை உணர்வினன் ஆதல், முற்றும் உணர்தல், இயல்பகவே பாசங்களின் நீங்குதல், பேரருள் உடைமை, முடிவுஇல் ஆற்றல் உடைமை, வரம்புஇல் ஆற்றல் உடைமை. ( திருக்குறள். 9. பரிமேலழகர் உரை )

**( 8 )** இல்லாதான் வள்ளலாய் உள்ளானை இரவாமுன் ஈதல் போலும்
நல்லானே உனதுபதம் விரும்பாதேன் ஆயிடினும் நல்க வேண்டும்
கல்லாத புல்லியர்போல் தேகபோ கம்விரும்பிக் கலங்கா நின்ற
பொல்லாதேன் பிழைபொறுக்கும் போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : நல்க வேண்டும்= திருவடியை அருளவேண்டும். தேகபோகம்= உடலின்பம்.

**பொழிப்புரை** : வள்ளலாய் இருக்கும் ஒருவன், வறியவன் ஒருவன் தன்னிடம் யாசிக்கும்முன்னே தேவையானதைத் தருதல்போல்; நல்லவனாகிய உனது திருவடியை நான் விரும்பிக்கேளாவிடினும் நீ அதனை எனக்கு வழங்கவேண்டும். கற்கவேண்டியதைக் கல்லாத அற்பர்போல் உடலின்பம் விரும்பி மனம் வருந்தும் பொல்லாதஎன்பிழையைத் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகப் புனிதனாம் குமரனே! பொறுத்தருள வேண்டும்.

**( 9 )** ஊமர்கண்ட கனவினைப்போல் உரைப்பரிய சிவாநுபவம் உணரா நின்ற
காமருஞா னியர்பரவும் உனதுசே வடிநாயேன் காண்ப(து) என்றோ
தேமருவு மலர்க்கூந்தல் தெய்வவளம் பிடிநோக்கம் சேரும் தோளாய்
பூமகளுக்(கு) அணிகாட்டும் போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : சிவாநுபவம்= சிவபிரான் வழங்கும் பேரின்பஅநுபவம். உணராநின்ற= உணர்ந்த. காமரு= விரும்பத்தக்க. தெய்வவளம்பிடி= தெய்வயானை அம்மை. நோக்கம்= பார்வை. அணிகாட்டும்= அழகுசெய்யும்.

**பொழிப்புரை** ; பேராற்றலை எண்ணி, தேன்பொருந்திய மலர்கள் சூடிய தெய்வயானைஅம்மையார் உன்தோளினை நோக்கும் அழகனே! நிலமகளுக்கு அழகுசேர்க்கும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகப் புனிதனாம் குமரனே! ஊமையர்கண்ட கனவை எடுத்துக்கூற இயலாததுபோல், சிவபிரான் வழங்கும் பிறர்க்குக் கூறவியலாத பேரின்ப அநுபவத்தை வழங்குவதும் விரும்பத்தக்க ஞானியர் போற்றுவதும் ஆகிய உன்சேவடியை நாயடியேன் காண்பது எந்நாள் ? இப்போதே அருள்க.

**விளக்கம்** : எந்தஒரு அநுபவத்தின் தன்மையையும் உணரத்தான் முடியுமேதவிர, அது இப்படி இருந்தது என்று எடுத்துக்கூறவியலாது. சிவாநுபவமும் அத்தகையதே.

( 10 ) மடமைசெறி புலைநாயேன் மனம்திருத்தித் திருவடிக்கீழ் வைக்க என்றும்
கடன்உனக்கே யாய்இருக்க அடிக்கடிஇங்(கு) உரைப்ப(து)என்னே கடைய னேனே
சுடர்அனைய செழுஞ்சூட்டுப் பல்பொறிச்செஞ் சிறைச்சேவல் துவசத் தோனே
புடவிஇடர் தவிர்த்(து)ஆளும் போரூர்வாழ் ஆறுமுகப் புனித வேளே.

**குறிப்புரை** : கடன்= கடமை. சுடர்= தீச்சுடர். சூட்டு= கொண்டையுடைய. பொறி= புள்ளி. துவசம்= கொடி. புடவி இடர்= உலகத்துன்பம்.

**பொழிப்புரை** : தீச்சுடர்போன்று சிவந்த செழுமையான கொண்டை, பலநிறப்புள்ளிகள் அழகிய சிறகுஆகியன உடைய சேவலைக் கொடியாக ஏந்தியவனே! உலகத்துன்பங்கள் என்பால் வராமல்தடுத்து என்னை ஆள்கிறவனாய்த் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள ஆறுமுகப் புனிதனாம் குமரனே! அறியாமை செறிந்த கீழான நாயேனின் மனத்தைத் திருத்தி உன்திருவடிக்கீழ் வைத்தருள்வது உன்கடமை என்பதைக் கடைப்பட்டவனாகிய நான் உனக்கு அடிக்கடிச் சொல்லவேண்டுவதில்லை. என்னை எடுத்தாள்க.

***************

## 3, திருவடிப்பற்று

*****************************

கலிவிருத்தம்

( 1 ) அருள்ஐங்கரன் இளையோய்திகழ் ஆ(று)ஆனன நாதா
இருள்இன்றி இருந்(து)உன்பதம் என்(று)எய்துவல் அடியேன்
மருஒன்றிய நீபத்தொடை மார்பாவடி வேலா
திருஒன்றிய போரூருறை தேவேகுக வேளே.

**குறிப்புரை** : ஐங்கரன்= விநாயகர். ஆனனம்= திருமுகம். இருள்= துன்பம். எய்துவல்= அடைவேன். நீபத்தொடை= கடம்பமலர்மாலை. திரு= தெய்விகம்

**பொழிப்புரை** : மணம்பொருந்திய கடம்பமலர்மாலை அணிந்தமார்பனே! கூர்மையான வேலேந்தியவனே தெய்விகம் பொருந்திய திருப்போரூரில் எழுந்தருளியுள்ள இறைவனே! குகன்என்னும் குமரனே! அருளும் பண்புடைய விநாயகருக்கு இளையவனே! ஆறு திருமுகங்களுடைய தலைவனே! துன்பமின்றி வாழ்ந்து உன்திருவடியை என்று அடைவேன்!

( 2 ) ஈசன்தரு குமராஇம கிரியான்மகள் புதல்வா
நேசம்திகழ் இருபாவையர் நினை(வு)ஒன்றிய வடிவா
மா(சு)இன்(று)உன(து) அருள்நின்றிடு வழிதந்(து)எனை ஆளாய்
தே(சு)ஒன்றிய போரூருறை தேவாகுக வேளே.

**குறிப்புரை** : இமகிரியான் மகள்= இமவான்மகள் பார்வதிதேவி. இருபாவையர்= வள்ளி தெய்வயானை. வடிவா= அழகா. உனதுஅருள் நின்றிடு வழி= உனது அருள்நிலைத்த வழி. தேசு= ஒளி.

**பொழிப்புரை** : சிவபிரான் தந்த குமரனே! இமவான்மகள் பார்வதிதேவிக்கு மகனே! சிறந்துவிளங்கும் அன்புடைய வள்ளி தெய்வயானை இருவர் நினைவும் ஒருசேரப்பதிந்த அழகனே! அருள்ஒளி பொருந்திய திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவனே! குகன்என்னும் குமரனே! மாசில்லாத உனது அருள்என்பால் நிலைக்கும் வழியை எனக்கு அருளி என்னை ஆள்வாயாக.

( 3 ) புவனம்சர அசரம்செறி புறன்உள்ளொடு கீழ்மேல்
நவம்ஒன்றிய சுகபூரண நாதாசிவ போதா
தவமும்பதி அறிவும்நனி தந்(து)இன்(று)எனை ஆளாய்
சிவனின்சுத போரூருறை தேவாகுக வேளே.

**குறிப்புரை** : சரம் அசரம்= இயங்குதிணை, நிலைத்திணை. புறன் உள்ளொடு கீழ்மேல் செறி= வெளியேஉள்ளே கீழே மேலே செறிந்த. நவம் ஒன்றிய= புதுமை பொருந்திய. சுக பூரணம்= முழுமையான பேரின்பம். பதி அறிவு= பதிஞானம். சுத= மகனே.

**பொழிப்புரை** : உலகம், உலகத்து இயங்குதிணை, நிலைத்திணை இவற்றின் வெளியே, உள்ளே, கீழே, மேலே என்று எங்கும் புதுமைபொருந்திய முழுமையான பேரின்பமாய் விளங்கும் தலைவனே! சிவஞானியே! சிவபிரானின் மகனே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவனே! குகன்என்னும் குமரனே! எனக்குத் தவமும், பதிஞானமும் மிகுதியாகத்தந்து இன்றே அருளி ஆட்கொண்டருள்க.

**விளக்கம்** : தன் இடம்விட்டு நகரவியலாத புல் செடி மரம் என்ற உயிர்கள் நிலைத்திணை. புழு பூச்சி போன்று தன்இடம்விட்டு நகரும்வாய்ப்புடையன இயங்குதிணை யாகும்.

( 4 ) சூர்சேனையை அடுவீர்கள் தொழும்பங்கய பாதா
ஏர்கூரஎந் நாளுமெனது) உளம்மன்னுற நினையாய்
தார்மார்பக கூர்வேலவ தடமாமயில் வீரா
சீர்மேவிய போரூருறை தேவாகுக வேளே.

**குறிப்புரை** : அடு= கொல்லும். ஏர்கூர= சீலம்மிக, மன்னுற= நிலையாகத் தங்க. மார்பக= மார்பு உடையவனே. தடமா மயில்= பெருமைபொருந்திய அழகிய மயில்

**பொழிப்புரை** : மாலைகள் அணிந்த மார்புடையவனே! கூர்மையான வேல்ஏந்தியவனே! பெருமை பொருந்திய அழகிய மயிலில் ஏறிவரும் வீரனே! சிறப்புப்பொருந்திய திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவனே! குகனென்னும் குமரனே! அசுரர்படையைக் கொல்லும் வீரர்கள் வணங்கும் தாமரைத் திருவடியனே!எனது உள்ளத்தில் எந்நாளும் சீலம்மிகுமாறு நீ நிலையாகத் தங்க எண்ணியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : நினையாய்= முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று. தட- உரிச்சொல்.

( 5 ) தகரப்பரி மிசைஏறிய தாளாஅணி தோளா
சுகநற்கதி பெறஎற்(கு)உள துகள்அற்றிட நினையாய்
நிகழ்குக்குட விருதாசுரர் நிருபாஅரி மருகா
திகழ்வுற்றிடு போரூருறை தேவாகுக வேளே.

**குறிப்புரை** : தகரப்பரி=ஆட்டுக்கிடா ஆகிய குதிரை. நற்கதி சுகம்= வீடுபேற்றின்பம். எற்கு= என்னிடம். துகள்= குற்றங்கள். நிகழ்= ஒளிரும். நிருபா= அரசனே.

**பொழிப்புரை** : ஒளிரும் சேவற்கொடியாகிய விருதுஏந்தியவனே! தேவர்க்கு அரசனே! திருமால் மருமகனே! சிறந்து விளங்கும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவனே!

குகன்என்னும் குமரனே! ஆட்டுக்கிடா ஆகியகுதிரைமேல் ஏறிவரும் திருவடியனே! என்னிடம் உள்ள மாசுகள் அற்றொழியவும் வீடுபேற்றின்பம் நான்பெறவும் அருள்க.

( 6 ) நல்வந்தனை அடியார்உளம் நாடும்படி தருவோய்
அல்வஞ்சனை அறஎன்உளம் அருள்செய்(து)அதில் நிறைவோய்
எல்வந்(து)உறு வேலாமயில் ஏறும்தெய்வ ராயா
செல்வம்திகழ் போரூருறை தேவாகுக வேளே.

**குறிப்புரை** : வந்தனை= வணக்கம். நாடும்படி= என்னை விரும்புமாறு. அல்வஞ்சனை= இருள் ஆகிய வஞ்சனை. எல்= சூரியன். ராயா= அரசே.

**பொழிப்புரை** : சூரியன் வந்துபொருந்தியதுபோன்ற ஒளிவடிவான வேலேந்தியவனே! நன்முறையில் வணங்கும் அடியவர் உள்ளம், என்னை விரும்புமாறு அருள்கிறவனே! இருளாகிய வஞ்சனை என்னுள்ளத்திலிருந்து வெளியேற அருளி அவ்வுள்ளத்தில் நிறைகிறவனே! செல்வம்சிறந்து விளங்கும் திருப்போரூரில் எழுந்தருளியுள்ளதேவனே! குகன்என்னும் குமரனே!அருள்க.

( 7 ) கனகும்பனன் உளம்மாவிழி காணும்திரு அடியாய்
நினைவும்மல இருளும்அறு நிலைதந்(து)எனை ஆளாய்
வனசம்திகழ் திருமா(து)அருள் வளரும்சனர் குழுமித்
தினமும்புகழ் போரூருறை தேவாகுக வேளே.

**குறிப்புரை** : கனகும்பனன்= பெரிய குடத்தில் தோன்றிய அகத்தியர். உளம்= உள்ளத்தால். மாவிழி=அழகிய கண்களால். மல இருளும் நினைவும் அறு= மும்மல இருளும் அவைபற்றிய நினைவும் இல்லாத. வனசம்= தாமரை. சன= மக்கள்.

**பொழிப்புரை** : தாமரையில் இருக்கும் கலைமகள் திருமகளுடன் அருள்மிகும் மக்களும் கூடி நாடோறும் வணங்கிப்புகழத் திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவனே! குகன்என்னும் குமரனே! பெரிய குடத்தில் தோன்றிய அகத்தியர் மனத்தாலும், அழகிய விழிகளாலும் காணும் திருவடியுடையவனே! என் மும்மல இருளும் அவைபற்றிய நினைவும் இல்லாத நிலையினை அருளி என்னை ஆண்டருள்க.

( 8 ) அயனார்அறி வரும்ஓர்மொழி அரனார்க்(கு)அரு ளியவா
மயல்தீர்பரி புரணத்திடை வைத்(து)என்றனை ஆளாய்
உயர்மாமறை முடிமீதினில் உறுகாரண சுகமே
செயவேலவ போரூருறை தேவாகுக வேளே.

**குறிப்புரை** : அயனார்= நான்முகன். மொழி= சொல் - ஓங்காரம். அரனார்= சிவபிரான். மயல்= மனமயக்கம். பரிபுரணம்= நிறைவான அருள். காரணசுகம்= ஆன்மாவின் பேரின்பம்.

**பொழிப்புரை** : உயர்ந்த சிறந்த மறைகளின் முடியாகிய உபநிடத்தில் பொருந்தியுள்ளவனாகிய ஆன்மாக்களின் பேரின்பமே! வெற்றி வேலனே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவனே! குகன் என்னும்குமரனே! நான்முகனால் அறிவதற்கரிய ஓங்காரத்தின்பொருளைச் சிவபிரானுக்கு அருளியவனே! மனமயக்கம் இல்லாதபடி நிறைவான திருவருளில் என்னை நிலைநிறுத்தி ஆண்டருள்க.

( 9 ) வானோர்தொழு பதியேசடை மன்னன்தரு மதியே
ஞானோதயம் அகலா(து)எனை நண்ணும்படி அருளாய்
கோனேஅரு ளோனேகுண வானேமயி லோனே
தேனார்பொழில் போரூருறை தேவாகுக வேளே.

**குறிப்புரை** : சடைமன்னன்= சிவபிரான். மதி= ஞானம்.

**பொழிப்புரை** : அரசனே! அருள்வடிவானவனே! குணக்குன்றே! மயிலூர்தியனே! தேன்மிகப்பொருந்திய சோலைகளுடைய திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவனே! குகன் என்னும் குமரனே! தேவர்கள் வணங்கும் தலைவனே! சிவபிரான் அருளிய ஞானமே! என்னிடம் தோன்றிய ஞானம் என்னைவிட்டு அகலாது பொருந்திஇருக்க அருள்க.

( 10 ) இசைஒன்றிய இயல்நாடகம் எணிஓதிய புலவா
அசை(வு)இன்றி இருந்(து)என்(று)உன(து) அடிசேர்குவல் அடியேன்
விசைசென்றிடு மயில்வாகனம் மிசைஏறிய கோவே
திசைஎண்ணுறு போரூருறை தேவாகுக வேளே.

**குறிப்புரை** : ஒன்றிய= பொருந்திய. எணி= எண்ணி - ஆராய்ந்து. அசைவு= மனச்சஞ்சலம். சேர்குவல்= சேர்வேன். எண் திசை உறு= எட்டுத்திசைகளிலும் புகழ்வாய்ந்த.

**பொழிப்புரை** : விரைந்து செல்லும் மயில்ஊர்தியில் ஏறிவரும் அரசே! எட்டுத்திசைகளிலும் புகழ்வாய்ந்த திருப்போரூரில் எழுந்தருளியுள்ள தேவனே! குகன் என்னும் குமரனே! இசையுடன் கூடிய இயல் நாடகம் ஆகியவற்றை ஆராய்ந்து கூறிய புலவனே! மனச்சஞ்சலம் இல்லாமல் அடியேன் எந்நாளில் உனது திருவடியடைவேன்!

**விளக்கம்** : இயல் இசை நாடகம் என்பது மரபாயினும் இசையினை முதலில் வைத்துக்கூறியது, எவ்வகை உயிர்களையும் ஈர்க்கும்தன்மை உடையது அதுவாதலின் என்க.

*******

**திருப்போரூர் சந்நிதிமுறை .**
**4. திருவடிப்பற்று.**

பன்னிருசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்
***

சோம கிரணப் பெருங்கருணை சுரந்த முகங்கள் ஓர்ஆறும்
சுருதி வழுத்தும் பன்னிரண்டு தோளும் நீபத் தொடைமார்பும்
காமர் நிறச்செம் பட்டாடை காட்சி மருங்கும் சிறுசதங்கை
கலித்த உபயத் திருத்தாளும் கடையேன் துதிக்கப் பணிப்பாயே
சேம நிதியே சுரர்பதியே தெய்வத் தருவே மலர்மருவே
செறிபூ ரணமே ஆரணமே சிறியேன் உயிருக்(கு) ஓர்உயிரே.
பூமன் அறியாப் பிரணவத்தின் பொருளைப் பகரும் பூங்கிளியே
போற்றும் அடியார்க்(கு) ஓர்அருளே போரூர் முருகப் பெருமாளே.

**குறிப்புரை** : சோமகிரணம்= நிலாஒளி. நீபத்தொடை= கடம்பமலர்மாலை. காமர்= விரும்பத்தக்க. காட்சி= தோன்றும். சிறுமருங்கு= சிற்றிடை. கலித்த= ஒலிக்கின்ற. உபயம்= இரண்டு. பணிப்பாய்= அருள்க. சேமநிதி= காப்பதற்காக வைக்கப்பெற்ற முதற்பொருள். .பூமன்= நான்முகன். அருளே= அருள்வடிவானவனே.

**பொழிப்புரை** : எம்மைக்காப்பதற்காக வைக்கப்பெற்ற முதற்பொருளே! தேவர்கள் தலைவனே! கற்பகமரமே! கற்பகமலரின் நறுமணமே! செறிந்த முழுப்பொருளே! மறைப்பொருளே! கீழான என்னுயிருக்கு வாய்த்த ஒப்பற்ற உயிரே! நான்முகன் அறியாத ஓங்காரப்பொருளைச் சிவபிரானுக்கு ஓதிய அழகிய கிளியே! போற்றுகிற அடியவர்க்கு வழங்கும் ஒப்பற்ற அருளே! திருப்போரூர் முருகப்பெருமானே! முழுநிலவின் ஒளிபோன்று அளவற்ற கருணைசுரக்கின்ற ஒப்பற்ற திருமுகங்கள் ஆறும், மறைகள் போற்றும் பன்னிரு தோள்களும், கடம்பமலர் மாலையணிந்த மார்பும், விரும்பத்தக்க நிறமாகிய செந்நிறப்பட்டாடை உடுத்துத் தோன்றும் இடுப்பும், சிறிய சதங்கை ஒலிக்கின்ற இரு திருவடிகளுமுடைய உன்னைக் கீழானநான் வணங்க அருள்க.

**இலக்கணக்குறிப்பு** : **முகங்கள்**ஆறும், தோளும், மார்பும், மருங்கும், தாளும் - எண்ணும்மைகள்.

( 2 ) மறைஆ கமத்தின் நெறிப்படியே வணங்கும் அவரின் ஒருவன் அல்லேன்
மனுபே ரன்பு தழைத்துநினை வந்திப் பாரின் ஒருவன் அல்லேன்
நிறைவால் நினது புரணசுகம் நேசித் தவரின் ஒருவன் அல்லேன்
நீச னேன்உன் திருப்பாத நிழற்கும் உரித்தேன் ஆவேனோ
சிறைஆர் தோகை மிசைத்தோன்றும் தேவே அமரர் பணிகோவே
சிவனார் புயத்தில் அணைத்(து) ஏத்தும் தெய்வக் குதலை மொழிக்குருந்தே

பொறையால் உயர்ந்த பெரியோர்கள் புந்திச் சுவையாம் செந்தேனே
புனிதம் நிறைந்த செவ்வேளே போரூர் முருகப் பெருமாளே.

**குறிப்புரை** : மனு= மன்னு = நிலைத்த. வந்திப்பார்= வணங்குகிறவர். நினது புரண சுகம்நிறைவால். புரண சுகம்= முழுமையான பேரின்பம். நீசன்= கீழானவன். தோகை= மயில். குதலை= பொருள் விளங்கா இன்மொழி. குருந்து= குழந்தை. புந்திச் சுவை= அறிவால் சுவைக்கப்பெறும் சுவை.

**பொழிப்புரை** : தோகையுடைய மயில்மேல் தோன்றும்இறைவனே! தேவர்கள் வணங்கும் தலைவனே! சிவபிரான் தனது தோள்களுடன்பொருந்த அணைத்துப்போற்றும் தெய்வத்தன்மை வாய்ந்தபொருள்விளங்கா இன்மொழி பேசும் குழந்தையே! பொறுமையில் சிறந்த பெரியவர்கள் அறிவால் சுவைக்கும் சுவையுடைய செந்தேனே! புனிதவடிவான சிறந்தகுமரனே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானே! நான், நான்மறைகள் ஆகமங்கள் கூறும்முறைப்படி வணங்குகிறவருள் ஒருவன் இல்லை. நிலைத்த பேரன்பு செழித்து அதனால் உன்னை வணங்குகிறவருள் ஒருவன் இல்லை. உனது முழுமையான பேரின்பத்தை விரும்பியவருள் ஒருவனும் இல்லை. இந்நிலையில் கீழானவனாகிய நான் உனது திருவடிநிழலில் தங்குகிறவன் ஆகவியலுமா ? அங்ஙனம் தங்கஅருள்க.

( 3 ) எண்ணி லாத நெடுங்காலம் எண்ணிலாத பலபிறவி எடுத்தே
இளைத்(து)இங்(கு) அவைநீங்கி இம்மா நிலத்தில் வந்(து)உதித்து
மண்ணின் வாழ்க்கை மெய்யாக மயங்கி உழன்றால் அடியேன்உன்
மாறாப் பெருமை தரும்பாத வனசத் துணைஎன்(று) அடைவேனே
கண்ணின்மணியே உயிர்க்களியே கருணைப் புயலே சுகக்கடலே
கச்சித் தாய்உச் சியைமோந்து கண்ணோ(டு) அணைக்கும் திருத்தாளா
புண்ணி யோர்எண் ணியகரும்பே பொழிமும் மதவா ரணமுகத்தோன்
பொற்(பு)ஆர் துணையே அற்புதனே போரூர் முருகப் பெருமாளே.

**குறிப்புரை** : இளைத்து= தளர்ந்து / வருந்தி. மெய்யாக மயங்கி= உண்மை என்றுநம்பி. மாறாப் பெருமை= நிலையான சிறப்பு - வீடுபேறு. கச்சித்தாய்= அருள்தரு காமாட்சியம்மை. கண்ணோடு அணைக்கும்= பார்த்து மகிழும். வாரணமுகத்தோன்= விநாயகர்.

**பொழிப்புரை** : கண்பாவையே! உயிர்கட்குத் தேனே! கருணை வழங்கும் மேகமே! நலம்தரும் கடலே! அருள்தரு காமாட்சியம்மை கண்டுகளிக்கும் திருவடியனே! புண்ணியர் நினைக்கின்ற கரும்பே! மும்மதம் பொழியும் யானைமுகத்து விநாயகரின் அழகிய துணையே! திருப்போரூர் முருகப்பிரானே! எண்ணற்கரிய காலமாக இவ்வுலகில் எண்ணற்ற பலவகைப் பிறவிகள் எடுத்து வருந்தி அவ்வருத்தம் நீங்கி மனிதனாகப் பிறந்தும், இவ்வுலகவாழ்க்கை மெய்யானது - நிலையானது என்று மயங்கித் துன்புற்றால் அடியவனாகிய நான், வீடுபேறு தரும் உனது திருவடித்தாமரையைத் துணையாக என்று அடைவேன். அருள்புரிக.

**விளக்கம்** : பலவகைப்பிறவிகள் :

" புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
.........................................................................................
எல்லாப்பிறப்பும் பிறந்து இளைத்தேன் " ( சிவபுராணம் )

" எனைப்பல யோனியும் நினைப்பரும் பேதத்து
யாரும் யாவையும் எனக்குத் தனித்தனித்
தாயர் ஆகியும் தந்தையர் ஆகியும்
வந்தி லாதவர் இல்லை யான்அவர்
தந்தையர் ஆகியும் தாயர் ஆகியும்
வந்தி ராததும் இல்லை முந்து
பிறவா நிலனும் இல்லை அவ்வயின்
இறவா நிலனும் இல்லை பிறிதில்
என்னைத் தின்னா உயிர்களும் இல்லை யான்அவை
தம்மைத் தின்னாது ஒழிந்ததும் இல்லை அனைத்தே
காலமும் சென்றது யான்இதன் மேல்இனி
இளைக்குமாறு இலனே " ( திருமுறை பதினொன்று. திருக்கழுமல....11 - 22 )

( 4 ) கள்ளம் செறிந்த வஞ்ச நெஞ்சக் கயவ னேனைப் புலையன்எனைக்
கரு(து)ஆ சார ஈனமுடைக் கசட னேனை மயல்செறிந்த
உள்ள முடைப்பொய் யவனேனை உன்பே ரருளால் உறநோக்கி
உயர்பே ரின்பத் திடைஇருத்தா(து) உறில்நான் அடியேன் உய்வேனோ
வெள்ளம் செறிந்த சடாமகுட விமலன் புதல்வா அரிமருகா
வேடர் குலமா மகள்கணவா விறல்மா முனிவர் தொழும்தலைவா
புள்ளும் ஞிமிறும் கலந்(து)ஆர்க்கும் புனித நீபத் தொடைமார்பா
புரைதீர் தகரப் பரிஏறும் போரூர் முருகப் பெருமானே.

**குறிப்புரை** : ஆசார ஈனம்= ஒழுக்கமின்மை. கசடன்= அறிவிலி. உற= இன்பம்பொருந்த. இருத்தாது உறில்= இருத்தாவிடில். சடாமகுடம்= சடைமுடி. புள்ளும் ஞிமிறும் கலந்து ஆர்க்கும் போரூர் என்க புள்= பறவை. ஞிமிறு= தேன்வண்டு. தகரப்பரி ஏறும் புரைதீர் நீபத்தொடை மார்பா என்க.

**பொழிப்புரை** : கங்கைநீர் செறிந்த சடைமுடியுடையவனும், இயல்பாகவே மலமில்லாதவனுமாகிய சிவபிரானுக்கு மகனே! திருமால் மருமகனே! வேடர்குலத்தில் சிறந்தவளாகிய வள்ளி நாச்சியார் கணவனே! பெருமைபொருந்திய முனிவர்கள் வணங்கும் தலைவனே! குற்றமில்லாத கடப்பமாலையணிந்த மார்புடன் ஆட்டுக்கிடாவில் ஏறி, வரும் புனிதனே! பறவைகளும் தேன்வண்டும் கூடிஆரவாரம் செய்யும் திருப்போரூர் முருகப்பிரானே! கள்ளத்தனம் செறிந்த வஞ்சனையான மனமுடைய கயவனும், கீழானவனும்,போற்றத்தக்க ஒழுக்கமில்லாத அறிவிலியும், மனமயக்கம் செறிந்த உள்ளமுடன் பொய்பேசுகிறவனும் ஆகிய என்னை, உனது பெருமைபொருந்திய அருட்பார்வைஅருளி, உயர்ந்த பேரின்பமாகிய வீடுபேற்றில் இருத்தாவிடில், அடியவனாகிய நான் ஈடேறுவேனா. அருட்பார்வையால் ஈடேற்றம் அருள்க.

( 5 ) சீலம் மிகுந்த பத்திநெறி தினமும்மாறா நடையினராய்ச்
செலுத்தா நெறியில் பொறிவழியில் செல்லா(து) இருந்த உளத்தினராய்க்

கோலம் செறிந்த படியேநற் குணமும் சிறந்தோர் ஆகிஉனைக்
கூடும் அடியார் போல்எனையும் குறித்(து)ஆட் கொண்டாய் நீயன்றோ
நாலு வேதம் தொழு(து)ஏத்தும் நாத முடியின் பேரொளியே
நம்பும் அடியார்க்(கு) இன்பம்எல்லாம் நல்கும் தேனே கயவர்தமைப்
போலும் திரிந்தேன் உளம்புகுந்த போதா னந்தப் பெருங்கடலே
புவிஈ டேற மயில்ஏறும் போரூர் முருகப் பெருமானே.

**குறிப்புரை** : நடை= ஒழுக்கம். செலுத்தாநெறியில் பொறிவழியில்= நான் செலுத்தாத வழியிலோ என்ஐம்பொறிகளின் வழியிலோ. கோலம்= அழகு. குறித்து= மதித்து. நாதமுடி= நாதாந்தம். கயவர்= கீழ்க்குணமுடையோர். போதானந்தம்= ஞானத்தால் அமைந்த பேரின்பம்.

**பொழிப்புரை** : நான்கு வேதங்களும், வணங்கிப்போற்றும் நாதாந்தத்தில் விளங்கும் பேரொளியே! உன்னை நம்பிவாழும் அடியவர்களுக்கு எல்லாஇன்பங்களும் தரும்தேனே! கீழ்க்குணமுடையோர் போல் திரிந்த என்உள்ளத்தில் புகுந்த ஞானத்தால் அமைந்த பேரின்பப் பெருங்கடலே! உலகம் ஈடேறும்பொருட்டு - உய்திபெற மயிலில் ஏறிவரும் திருப்போரூர் முருகப்பெருமானே! நற்பண்புகள் மிக்க பத்திநெறியில்விலகா ஒழுக்கமும், நான்செலுத்தாத வழியிலோ, என்புலன்களின் வழியிலோ செல்லாத உள்ளமும், அழகு செறிந்ததுபோல் நற்குணங்களும் செறிந்தவராகி, உன்னை வந்தடையும் அடியவரைப்போல் என்னையும் ஒருவனாக மதித்து ஆட்கொண்டவன் நீயல்லவா!

**விளக்கம்** : ஐம்பொறிகளையும் பொத்தியும் மூடியும் கொண்டபோதிலும் ஐம்புலன்கள் தறிகெட்டுச் செல்வனவாதலின் பொறி என்பது ஆகுபெயராய் நின்று புலன்களைக்குறித்தது.

( 6 ) தனுவோ(டு) இலகு கரணமுடன் சாரும் புவன போகம்இவை
தமையான் என(து)என்(று) உணர்ந்துமயல் தழைத்துத் தருக்கோ(டு) உழல்கின்றேன்
உனதாம் அவைகள் மாயைஇடை உதிக்கச் செய்தாய் நீஅதனால்
உள்ள வா(று)இம் முறைமைதனை உணராச் சிறியேன் உய்வேனோ
பனகா பரணர்க்(கு) உபதேசம் பாலித் தருளும் பரகுரவா
பைந்தார்க் கூந்தல் தெய்வானை பரிந்து மகிழ வருகணவா
புனையா மாலை தொடுத்(து)ஏத்தும் பொரு(வு)இல் அருண கிரிநாதன்
புகழ்வீட்(டு) இன்பம் பெறவுதவும் போரூர்முருகப் பெருமானே.

**குறிப்புரை:** தனு= உடம்பு. கரணம்= மனம் - உள்ளம். சாரும்= இவை பொருந்தும். புவன போகம்= உலகு, உலக இன்பங்கள். தமை= தம்மை. யான் எனது= உடம்பை யான்என்றும், பிறவற்றை எனது என்றும். மயல்தழைத்து= மயக்கம் செழித்து. உனதாம்= உன்னுடையனவாகிய. உள்ளவாறு= உள்ளதை உள்ளபடி. பனகாபரணர்= நாகத்தை அணிகலனாக அணிந்த சிவபிரான். பரகுரவா= மேலான குருவே. பைந்தார்க் கூந்தல்= பசியமாலை சூடிய கூந்தல். புனையாமாலை= நாரில் தொடுக்கப்பெறாத மாலை - பாமாலை. புகழ் வீட்டுஇன்பம்= புகழும் வீடுபேற்று இன்பமும்.

**பொழிப்புரை** : நாகத்தை அணிகலனாக அணிந்த சிவபிரானுக்கு ஓங்காரப்பொருளை உபதேசித்த மேலான குருவே! பசிய - வளமான மாலைசூடிய கூந்தலுடைய தெய்வயானைஅம்மை பரிவுடன் மகிழஉள்ள அவள் கணவனே! ஒப்பற்றபாமாலை தொடுத்துப் போற்றும் அருணகிரியார் இம்மையில் புகழும், மறுமையில் வீடுபேற்று இன்பமும்பெற அருளிய திருப்போரூர் முருகப்பிரானே! இந்த உடம்புடன் சேர்ந்து விளங்கும் உள்ளமும் இவைசார்ந்த உலகம், உலகஇன்பங்கள் ஆகிய இவை அனைத்தும், உன்னுடையன. இவற்றை மாயைக்கண் நீ தோற்றுவித்தாய் என்ற உண்மையை உள்ளதுஉள்ளவாறு உணரவியலாத கீழ்மகனாகிய நான் ஈடேற்றம் பெறுவேனோ! எனக்கும் ஈடேற்றம் அருள்க.

( 7 ) மன்னர்ஆவார் உறுசுகமும் வானோர் மகிழ்ந்து பெறுசுகமும்
மணிப்பை நாகத் தவர்சுகமும் மற்றை யோர்கள் அடைசுகமும்
பன்னும்இடத்தில் சிவத்(து)எழுந்த பரமானந்த லேசம்எனப்
பகர்ந்தாய் குருவாய் எழுந்தருளிப் படிறேன் மறந்(து)இங்(கு) உழல்கின்றேன்
கன்னல் எழுந்த தெளிசாறே கட்டு மாவின் தீங்கனியே
கதலிக் கனியே நற்பலவின் கனகச் சுளையே கதிமுளையே
பொன்னம் பொருப்பே என்விருப்பே போதச் சுகமே கிஞ்சுகமே
புரண வெளியே உள்ஒளியே போரூர் முருகப் பெருமானே.

**குறிப்புரை** : மணிப்பை நாகத்தவர்= இரத்தினமும் படமும்கொண்ட நாகருலத்தவர். பன்னும்இடத்தில்= யோசிக்கும்போது. லேசம்= அற்பம். படிறேன்= குற்றமுடையயான். கன்னல்= கரும்பு. கட்டு= நிறைந்த. கதலி= வாழை. கனகச்சுளை= பொன்நிறத்துச் சுளை. கதிமுளை= வீடுபேற்றுக்கு முதன்மையன். பொன்னம் பொருப்பு= பொன்மயமான அழகிய மலை. போதச்சுகம்= ஞானம்தரும் இன்பம். கிஞ்சுகம்= கிளி. புரணம்= முழுமையான. உள்ளொளி= ஞானம்.

**பொழிப்புரை** : கரும்பில் வெளிப்பட்ட தெளிந்த சாறே! இனிமை நிறைந்த மாங்கனியே! வாழைப்பழமே! நன்குபழுத்த பலாப்பழத்தின் பொன்னிறச்சுளையே! வீடுபேறு அருள்வதில் முதன்மையனே! பொன்மயமான அழகிய மலையே! எனக்கு விருப்பமானவனே! ஞான இன்பமே! கிளியே! முழுமையான வெட்டவெளியே! ஞானமே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானே! அரசராக உள்ளவர் அனுபவிக்கும் இன்பமும், வானுலகவர் மகிழ்ந்து இன்புறும் சுகமும், இரத்தினமும் படமும் உடைய நாகருலகினர் இன்பமும், மற்றும் உள்ளவர்கள் அனுபவிக்கும் இன்பமும் ஆகிய இவைஅனைத்தும், சிவபிரானால் தோன்றும் மேலான இன்பத்துடன் ஒப்பிட்டு யோசிக்கும்போது அற்பமானவை ஆகும் என்று குருவாக எழுந்தருளிக் கூறினாய். குற்றமுடைய நான் அதனை மறந்து துன்புறுகிறேன். நல்ல நினைவை அருள்க.

( 8 ) ஓகை புரிந்து நன்னூலால் உணரத் தகுவ எலாம் உணர்த்தி
உறுபே ரருள்ஆ ரியன்ஆகி உபதே சங்கள் பலமொழிந்(து)ஈண்(டு)
ஆகம் மருவும் உயிர்க்(கு) உயிராய் அறியா தனயா வையும்உணர்த்தி
அடியேன் தனைஇங்(கு) ஆண்டுகொண்ட அருளுக்(கு) ஓர்கைம்

மா(று)ளதோ

வாகை புனைவேல் இறையோனே வழுத்து நாலு மறையோனே
வானோர்க்(கு) உறுசே னாபதியே மலைய முனிவன் குருபதியே
பூகம் மலிந்த செங்குலைக்காய்ப் புடையில் சிதறக் கயல்பாயும்
பொருவின் மருதச் சூழல்செறி போரூர் முருகப் பெருமானே.

**குறிப்புரை** : ஓகை புரிந்து= மகிழ்வுடன். தகுவ= தக்கன. ஆரியன்= தலைவன். ஆகம் மருவும்= உடம்பில் பொருந்திய. மலய முனிவன்= அகத்தியர். குருபதி= குருவாகிய தலைவன். பூகம்= பாக்கு. புடை= பக்கம். பொருவின்= ஒப்பற்ற.

**பொழிப்புரை** : வெற்றி சூடிய வேலேந்திய இறைவனே! நான்கு வேதங்களாலும் போற்றப் பெறுகிறவனே! தேவர்களுக்கு வாய்த்த சேனாபதியே! அகத்தியமுனிவர்க்குக் குருவான தலைவனே! பாக்குமரத்தின் செங்குலையான பாக்கு, பக்கமெல்லாம் சிதற, அதனால் கெண்டைமீன்கள் அஞ்சிப்பாயும் ஒப்பற்ற நன்செய்நிலச்சூழல் மிக்க திருப்போரூர் முருகப்பெருமானே! மகிழ்வுடன் சிறந்த நூல்கள்வழியே உணரத்தக்கன எல்லாம் உணரச்செய்து, மிக்க பேரருள்கொண்ட தலைவனாகி எனக்கு உபதேசங்கள் பலஉபதேசித்து, உடம்பில் செறிந்து பொருந்திய உயிருக்கு உயிராகவிளங்கி, அறியாத அனைத்தையும் உணர்த்தி, அடியவனாகிய என்னை ஆட்கொண்ட உனது அருளுக்குக் கைம்மாறு ஏதும் இல்லை.

**இலக்கணக்குறிப்பு** : கைம்மாறு உளதோ - உளதோ - ஓகாரம் எதிர்மறைப் பொருளது.

( 9 ) வேத முடியின் உறுபொருளை விரிபூ மிசைச்சே வடிபொருந்த
விகிர்த குருவாய் எழுந்தருளி விளம்பும் அவித்தை இருள்இரிய
ஓது மணியே அடியேனுன் உபய சரணம் மறந்தாலும்
உறுபே ரருளால் மனம்திருத்தி உயரச் சரணத்(து) இருத்தாயே
நாதம் அளிக்கும் குரல்புலியின் நகம்போல் துண்டச் செங்சூட்டு
நலத்த பொறிச்செஞ் சிறைச்சேவல் நளினக் கரத்தில் பிடித்தோனே
பூத கணங்கள் கொண்டாடப் பொருசூர் குலவேர் களைந்தவைவேல்
புனிதப் புயத்தின் மிசைஏந்தும் போரூர் முருகப் பெருமானே.

**குறிப்புரை** : விரிபூ= அகன்ற உலகம். விகிர்தகுரு= கடவுளாகியகுரு. அவித்தை= அஞ்ஞானம். இரிய= விட்டுஓட. ஓது= புகழும். உறு= மிக்க. இருத்தாய்= இருத்துக. நாதம் அளிக்கும்= சீறும். நகம் போல் துண்டம்= நகத்தைப்போல் கூரிய மூக்கு / அலகு. செஞ்சூட்டு= சிவந்த கொண்டையுடைய. பொறிச்செஞ் சேவல்= புள்ளிகளுடைய அழகிய சேவல் நளினம்= தாமரை. சூர்குல வேர்= அசுரர்குலத்து வேர். வை= கூர்மையான.

**பொழிப்புரை** : சீறும் குரலுடைய புலியின் நகம்போல் கூர்மையான அலகுடையதும், சிவந்த கொண்டைஉடையதும், அழகிய புள்ளிகளுடன் கூடியதும் ஆகிய சேவலைத் தாமரை மலர்போன்ற கையில் கொடியாக ஏந்தியவனே! போரிடும் அசுரர்குலத்தைப் பூதகணம் கொண்டாட வேருடன் களைந்த கூர்மையான வேலினைப் புனிதமான தோளில் ஏந்தியுள்ள திருப்போரூர் முருகப்பெருமானே! வேதத்தின் முடிந்தமுடிவான பொருளை அகன்ற

உலகிற்குவந்து உணர்த்திய கடவுளாகிய குருவே! பலரும்கூறும் அஞ்ஞானஇருள் விட்டுஓட உபதேசிக்கும்மணியே! உனது இரு திருவடிகளை நான் மறந்தபோதிலும், உனது மிகப்பெரிய அருளால் நான்மனம்திருந்தி உயரும்பொருட்டு உன்இருதிருவடியில் இருத்தியருள்க.

**இலக்கணக்குறிப்பு** : இச்செய்யுள் உவமையணி.

( 10 ) அலைஇ லாத சாகரம்போல் அனிலம் சேரா விளக்கதுபோல்
அரும்கல் இரும்பொன் சமமாகி ஆன தராசின் நுனியதுபோல்
நிலைஒன் றியநல் சமாதியுற்று நின்தாள் கமலத்(து) எழும்பிரச
நிறைவா ரிதியில் புகுந்(து)அதனில் நேசித்(து) அடியேன் இருப்பேனோ
விலையில் மகுடத் திருமுடியாய் மிளிர்குண் டலங்கள் செறிகாதா
வியன்கே யூரத் திருத்தோளா விஞ்சும் சதங்கை சூழ்தாளா
புலையும் கொலையும் களவும்இலாப் புனிதத் தவத்தோர் தொழு(து)ஏத்தும்
புராரி குமரா உமைசிறுவா போரூர் முருகப் பெருமானே.

**குறிப்புரை** : சாகரம்= கடல். அனிலம்= காற்று. அரும்கல்= சிறந்த படிக்கல். இரும்பொன்= மாற்று உயர்ந்த பொன். நுனி= முள். ஒன்றிய நிலை நல்சமாதி= திருவடியில் பொருந்திய சிறந்தசமாதி நிலை.. பிரசம்= தேன். வாரிதி= கடல். வியன் கேயூரம்= சிறந்த தோளணி. விஞ்சும்= மேலான. புராரி= சிவபிரான்.

**பொழிப்புரை** : விலைமதிக்கவியலாத மகுடம் சூடிய திருமுடியனே! ஒளிரும் குண்டலங்கள் அணிந்த செவியனே! சிறந்த தோளணி அணிந்த அழகிய தோள்களுடையவனே! மேலான சதங்கையணிந்த திருவடியனே! ஊன் உண்ணல், கொலைசெய்தல், திருடுதல் இல்லாத புனிதமான தவத்தினர் வணங்கிப்போற்றும் சிவபிரானின் மகனே! உமையம்மையின் குழவியே! திருப்போரூரில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானே! அலைஇலாத கடல்போல, காற்றில் அலையாத விளக்குப்போல, சிறந்தபடிக்கல்லுடன் எடையில் ஒத்தபொன் சமநிலையில் உள்ளதைக்காட்டும் தராசுமுள்நுனி போல் உன்திருவடியில் பொருந்திய மனத்தில் சமாதிநிலையடைந்து, உனது திருவடித்தாமரையில் சுரக்கும் அருளாகிய தேன்நிறைந்த கடலில் தோய்ந்து, அதனையே அடியேன் விரும்பி இருப்பேன்.

**இலக்கணக்குறிப்பு** : புலையும் கொலையும் களவும் - எண்ணும்மைகள். இச்செய்யுளில் மூன்று உவமையணிகள் உள. தாள்கமலத்து எழும் பிரசம் - ஏகதேசஉருவகவணி.

*******************************************